முதற் பதிப்பு : மே 1948

மற்ற நூல்கள் :

[illegible]மாரி நாவல்
தமிழ் நெஞ்சம்
மணல் வீடு
செந்தாமரை
கனவோ? காவியமோ?
விடுதலையா?
கி. பி. 2000
அறமும் அரசியலும்
அன்னைக்கு
பாவை



Printed at the Sadhu Press, Royapettah, Madras
for Kamala Prachuralayam, Madras—P. I. C. M. S. 197
Copies 1000—25 - 5 - 48

# முன்னுரை

உலக வாழ்க்கையில் உண்மையையும் அன்பையும் போற்றி வாழ்ந்த பெரியோர்களின் வரலாறுகளைக் கற்பதால் பெரும் பயன் உண்டு. கற்பவரின் வாழ்வைத் தூய்மைப்படுத்த வல்ல ஆற்றல் அவற்றிற்கு உண்டு. அத்தகைய வாழ்க்கைவரலாறுகளில் மோகனதாஸ் கரம் சந்த் காந்தியின் வரலாறு மிகச் சிறந்தது; அவர் நம் காலத்தில் வாழ்ந்தவர், நம்நாட்டில் வாழ்ந்தவர், நமக்காக வாழ்ந்தவர் என்பதே காரணம் ஆகும்.

அண்ணலைப் புகழ்வோர் பற்பலர்; போற்று வோர் மிகப் பலர்; வழிபடுவோர் பலர். ஆயினும் அவருடைய வாழ்க்கை உணர்த்தும் உண்மைகளை நாடுவோர் சிலர், அவற்றை உள்ள வாறு உணர்வோர் மிகச் சிலர்; உணர்ந்து பயன்படுத்துவோர் ஒருசிலரே. அவருடைய வாழ்க்கை, படைப்பின் சட்டங்களை ஒட்டி இயங்கிய தூய வாழ்க்கை; ஆகையால் அது எல்லா மக்களுக்கும் எடுத்துக்காட்டாக விளங் கும் நல் வாழ்க்கையாகும்.

நூற்றுக்கணக்கான நூல்கள் அவருடைய வாழ்க்கையை வரலாற்றுமுறையில் விளக்கு கின்றன. அதனால் இந்த நூலை அந்த முறையில் அமைக்கவில்லை. உலகம் போற்றுமாறு ஒருவர் வாழ்ந்த விழுமிய வாழ்க்கையில் விளங்கும் பண்புகளை ஒருவாறு எடுத்துக்காட்டுவதே இதன் நோக்கமாகும்.

மு. வ.

# உள்ளுறை

பக்கம

# 1

# தூய்மை

## அற விளக்கு

" இதோ இந்தக் கல்லை எறிகிறேன் ; எவ்வளவு உயரத்தில் போகிறது, பார்."

" நல்ல வலுவோடு எறிந்தால் அந்தக் கல் திரும்பியே வராது ; அப்படியே உயரத்தில் ஆகாயத்தில் போய்விடும் ; நான் எறியட்டுமா?"

" அது பொய். நீ எவ்வளவு உயரத்தில் கல் எறிந்தாலும் அது கட்டாயம் கீழே வந்து விழுந்துவிடும். எதுவும் மேலே போய் நின்றுவிடாது."

" யார் சொன்னது ? நீ பார்த்தது அவ்வளவுதான். உனக்கு என்ன தெரியும் ?"

" நீ மட்டும் பார்த்திருக்கிறாயா ?"

" பாண வேடிக்கையில் பார்த்ததில்லையா ? பற்ற வைத்து விட்டால், சுர்ர்ர்ரென்று பாணம் மேலே எவ்வளவு உயரத்தில் போய்ச் சேருகிறது. அது எப்போதாவது திரும்பி வருகிறதா ? விழுகிறதா ? இதைக்கூடப் பார்த்ததில்லையா ?"

" ஆமாம், பார்த்திருக்கிறேன். மெய்தான். பாணம் உயரத்தில் தான் போய்ச்சேருகிறது, மெய்தான்."

இப்படித்தான் சிறுவர்கள் பேசுகின்றார்கள் ; எண்ணுகின்றார்கள் ; மயங்குகின்றார்கள். உண்மை அவர்களுக்கும் தெரிகின்றது. ஆனால் சில நிகழ்ச்சிகளைக் கண்டு, "எது உண்மை? நாம் எண்ணியது உண்மைதானா?" என்று மயங்குகின்றார்கள். இயற்கையானது எது, செயற்கையானது எது என்று அவர்களால் பிரித்தறிய முடிவதில்லை. நம் அறிவிற்கு எட்டக்கூடியது எது, எட்டாதது எது

என்று தெளிந்தறிய முடிவதில்லை. விதி எது. விதி விலக்கு எது என்று பகுத்தறிய முடிவதில்லை. ஆனால், இளமையான மூளையின் கற்பனைத் திறன் அமைதியாக இருக்கவும் விடுவதில்லை. பொதுவாகக் கண்ட உண்மைகளையும் மறக்கச் செய்து, சிறப்பாக எங்கோ இரண்டோரிடத்தில் கண்ட காட்சிகளைக் கற்பனை செய்து எண்ணச் செய்கின்றது. அந்தப் பாணம் மேலே போய் என்ன ஆகின்றது, வெடித்த பிறகு கீழே விழுகின்றதா இல்லையா, இங்கேயே விழாவிட்டாலும் வேறு எங்கேயாவது விழுமல்லவா என்று எண்ணவும் விடாமல் கற்பனை அவர்களை மயக்குகின்றது.

மக்கள் வாழ்க்கையிலும் இப்படிப்பட்ட நிலைமையே இருக்கின்றது. பெரும்பாலோர் சிறுவர்கள்போல் மயக்கத்தையும் கற்பனையையும் அடிப்படையாகக் கொண்டே வாழ்க்கையை நடத்துகின்றார்கள். வாழ்க்கையைத் தொடங்கும்போது அறநெறியில் நடக்கவேண்டும் என்றே நம்பிக்கையோடு தொடங்குகின்றார்கள். அறமே வாழ்க்கைக்குத் துணை, அறநெறி தவறினால் இன்னலும் இடையூறும் நேரும், ஆகையால் பிறர்க்குத் துன்பம் செய்யாமல் அன்பைப் பெருக்க வேண்டும், உள்ளும் புறமும உண்மையைக் கடைப்பிடித்து ஒழுகவேண்டும் என்று வரையறைகள் ஏற்படுத்திக்கொண்டுதான் வாழ முயல்கின்றார்கள். ஆனால், அவர்களும் வாழ்க்கையில் பாண வேடிக்கைகளைக் கண்டு தடுமாறுகின்றார்கள். பிறகு வேறு வகையாக எண்ணுகின்றார்கள். திறமையோடு எறிந்தால் கல் கீழே திரும்பி விழாது என்று நம்புகின்றார்கள். உலகத்தில் அறநெறியில் நடந்தும் தமக்குத் துன்பம் வருவதையும், அறத்தை மதிக்காமல் மனம் போன போக்கில் வாழ்ந்தும் சிலர்க்கு இன்பமே வருவதையும் கண்டு கண்டு மயங்குகின்றார்கள். மற்றவர்களை உறிஞ்சியும் சுரண்டியும்

எப்படியாவது பணம் சேர்த்துவிட்டால், பிறகு நூற்றில் ஒரு பங்கு இரண்டு பங்கைத் தான தருமத்திற்கு என்று விளம்பரத்தோடு செலவு செய்து திறமையோடு நடந்து கொண்டால், உலகம் நல்லவர்களாக மதிக்கின்றது, கற்றவர்களும் கவிபாடுகின்றார்கள், மற்றவர்களும் அடங்கி நடக்கின்றார்கள் என்று எண்ணுகின்றார்கள். பொய்யும் கொடுமையும் இல்லாமல் வாழ முடியாது, முன்னேற முடியாது, வாழ்க்கை இப்படித்தான் இருக்க முடியும் என்று அமைதியுடன் நம்புகின்றார்கள்.

சிறுவர்கள் எவ்வளவுதான் மயங்கினாலும், இயற்கையில் பூமிக்கு அமைந்துள்ள இழுப்பாற்றல் (Gravitation Force) குன்றிவிடாது. அதை அறிவியல்முறையில் ஆராய்ந்து விளக்க நியூடன் போன்ற அறிஞர்கள் தொண்டு ஆற்றிக்கொண் டிருப்பார்கள். பொதுமக்கள் எவ்வளவுதான் அறத்தைப் புறக்கணித்தாலும், அதற்குள்ள ஆற்றல் மங்காது. அறவோர்—அறத்தையே கடவுளாட்சி எனப் போற்றும் சான்றோர்—அறத்தின் பெருமை விளங்கக் கூடிய வகையில் தொண்டு செய்து வாழ்ந்துகொண் டிருப்பார்கள்; புத்தரும் திருவள்ளுவரும் ஏசுவும் நபியும் திருநாவுக்கரசரும் காந்தியடிகளும் போன்ற அறவிளக்குகள் உலகத்தில் ஓயாமல் ஒளிபரப்பிக்கொண்டே இருக்கும்.

## அற்புதம் இல்லை

பறந்துபோய் மலையுச்சியை அடைவோம் என்று சொல்கின்றவர்களைப் பார்த்து ஏங்கி நிற்பது வீண். படிப்படியாக நடந்து ஏறி மலையுச்சியை அடைகின்றவர்களைப் பின்பற்றுவதே கடமை. குருடர்களின் செவிநுட்பத்தையும் செவிடர்களின் நினைவாற்றலையும் முடவர்களின் தோள் அமைப்பையும் போற்றித் தனக்கும் சிறந்தவை

வேண்டும் என்று ஏக்கம் கொள்வதால் பயனில்லை. நல்ல உடல் பெற்று நோயற்று வாழ்ந்து அறிவை வளர்ப்பவர்களைப் பின்பற்றுவதே பயன்பெறும் வழி. ஆறு விரலுடன் பிறந்தவர்களைப் பார்த்துப் பார்த்து, தன் கைவிரல்களை எண்ணி வருந்துவது அறியாமை. இரட்டை இலைகளையும் இரட்டைக் கனிகளையும் போற்றிக்கொண்டு, இலையும் பூவும் கனியும் இயற்கையாக அமைந்துள்ள பொதுவான எழிலைப் போற்ற மறப்பது தவறு. மேனோக்கி எழும் நீரூற்றுக்களைப் பாலைவனங்களில் பார்த்துவிட்டு அவைகளே நீர்வளத்திற்கு எடுத்துக் காட்டானவை என்று போற்றி நின்று காவிரியையும் கங்கையையும் மறப்பது குற்றம். சமயத்துறையிலும் அற்புதங்களைப் போற்றி அறநெறியை மறப்பது குற்றமாகும். அற்புதங்களைச் செய்தல் ஆற்றலை விழலுக்கு இறைப்பதே என்று இராமகிருஷ்ணர் கூறியுள்ளார். நீர்மேல் நடக்கும் வன்மையை ஒருவர் பெற்றிருப்பதாகப் பேச்சு நிகழ்ந்ததைக் கேட்ட இராமகிருஷ்ணர் சிரித்து, "ஓடக்காரனுக்குக் கூலி கொடுத்து ஆற்றைக் கடந்து போகலாமே. அதை விட்டு இந்த வித்தையைக் கற்பதில் ஏன் காலம் கழித்தாரோ?" என்றாராம். இன்று இளைஞர்களின் நெஞ்சில் சமயநெறி ஊன்றாதிருப்பதற்குக் காரணம் என்ன? சமயப் பெருமையைப் பரப்புமாறு அற்புதங்களை விளக்கும் பேச்சே பெருகி, சமய உண்மையைத் தெளிவிக்குமாறு அறநெறியை விளக்கும் தொண்டு குறைந்ததே காரணமாகும். அதனால்தான் அற்புதங்களே சமயம் என்று தவறாக உணர்ந்த இளைஞர் நெஞ்சம் அவற்றை விட்டு அப்பால் நகர விரும்புகின்றது. இத்தகைய பாலைவனத்தில் தொண்டே பூசையாய், அறவழியே ஒரு நெறியாய், சமயமே வாழ்வின் அடிப்படையாய் வாழ்ந்தவர் காந்தி அண்ணல். அவர் வாழ்க்கையில் அற்புதம் ஒன்றும் நிகழ்ந்ததில்லை. அற்புதங்களைப்

போற்றிப் பேசுவதில் அவர் கருத்துச் செலுத்தியதும் இல்லை.

## படிப்படியாக உயர்தல்

மற்றப் பெரியோர்கள் வாழ்க்கையை நினைக்கும் போது, "அவர்கள் எங்கே? நாம் எங்கே? நாம் அவர்களைப் போல் ஆக முடியாது. அவர்களுக்கு இறைவன் அருள் செய்தார். அதனால் அவர்கள் உயர்ந்தார்கள். கடவுள் கனவில் வந்து அருள் செய்த காரணத்தால் இன்னார் உயர்ந்தார். கலைமகள் நாவில் எழுதிய காரணத்தால் இன்னார் உயர்ந்தார். நேரில் வந்து ஆட்கொண்டமையால் இன்னார் அருள்நிலை பெற்றார். பிறக்கும்போதே இன்ன அற்புத வல்லமையோடு பிறந்தமையால் இன்னார் இப்படி வாழ முடிந்தது. நாம் என்ன செய்வது? நாம் அவர்கள் சென்ற நெறியில் செல்ல முடியாது; அவர்கள் வாழ்ந்த வாழ்க்கை நமக்குக் கிட்டாது" என்ற எண்ணங்களே தோன்றும். ஆனால், காந்தியின் வாழ்க்கையில் இதற்கு இடம் இல்லை. நம்மைப் போல் குறைகளோடு பிறந்தார்; முயன்று முயன்று குறைகளைப் போக்கிக்கொண்டார். நம்மைப் போல் புலன்களுக்கு அடிமையாக வாழ்ந்தார்; படிப்படியாகப் புலன்களை வென்று வென்று வீரரானார். நம்மைப் போல் துன்பங்களுக்கு நடுவே, குழப்பங்களுக்கு நடுவே நொந்தார்; மெல்ல மெல்ல நெஞ்சில் உரம் வளர்த்து உயர்ந்தார். நம்மைப் போல் இல்வாழ்க்கை வாழ்ந்தார்; உள்ளத் தூய்மையால் பற்றற்ற பெருந்தன்மையோடு உலகத் தொண்டு செய்தார். நம்மைப் போல் அழியும் உடல் பெற்று வாழ்ந்தார்; ஆனால் அது மறைவதற்கு முன் அரிய பெரிய செயல்களைச் செய்து முடித்தார். ஆகையால், அவர் சென்ற நல்வழியைப் பின்பற்றினால் நாமும் உரம்

பெறமுடியும், உயர்வு பெறமுடியும் என்ற நம்பிக்கையே நமக்குத் தோன்றுகின்றது. அவருடைய வாழ்க்கையை அவரே எழுதி வைத்துள்ள பெருந்தொண்டு, உண்மையை மாசுபடுத்தாமல் காக்கின்றது. அதன் பயனாக, அவரைப் பற்றிப் பொய்களைப் புனைந்து கற்பிக்க முடியவில்லை; அற்புதங்களை நுழைத்து எட்டா நிலையில் ஒதுக்க முடியவில்லை. குற்றங் குறைகளையும் படிப்படியான முயற்சிகளையும் இடர்கள் சூழ்ந்த தொண்டுகளையும் கண்டு ஊக்கம் பெறுகின்றோம்; முயற்சிக்கு ஏற்ற கூலியாக ஆற்றலும் பெறுகின்றோம்; படிப்படியாக மாசற்ற தூய வாழ்க்கை வாழ முடியும் என்ற நம்பிக்கையும் பெறுகின்றோம்; எவை அழிந்தாலும் அறம் அழியாது, அறமே வாழ்க்கைக்கு அடிப்படை என்ற தெளிவும் பெறுகின்றோம்.

காதல் வாழ்க்கை கணவனும் மனைவியுமாக வாழும் அன்பு வாழ்க்கை. பெற்றோரும் உற்றோரும் மற்றோரும் காதலர்க்கு உண்டு. ஆனால், அவர்களுடைய செல்வாக்கு, காதலரின் குடும்பத்தளவில் புகாதபடி காக்கவேண்டும். அதற்கு வழிகள் இரண்டு; ஒன்று, கணவனும் மனைவியும் தனிக்குடும்பம் நடத்திக் குறை நிறை நன்மை தீமை இன்பம் துன்பம் எல்லாம் தம் பொறுப்பாக ஏற்றுப் பயிற்சி பெற்றுப் பண்படுவது. மற்றொரு வழி மிகச் சிலரால்தான் முடியும்; நெஞ்சில் உரமும் குறிக்கோள் மறக்காத மாண்பும் உடைய சிலரால்தான் முடியும்; அவர்கள் பெரிய குடும்பத்தினுள்ளே இருந்தாலும், மற்றவர்கள் செய்யும் இடையூறுகள் அவர்களைத் தாக்கினாலும், அவற்றைப் பொருட்படுத்தாமல் தாம் மனம் ஒன்றியிருப்பதால் வெற்றி பெற முடியும் என்ற நம்பிக்கையோடு வாழ்வார்கள். இத்தகைய உரமும் மாண்பும் உடையவர்கள் உலகத்தில் மிகச் சிலரே.

சமய வாழ்க்கையும் இப்படிப்பட்டதே. கடவுளும் தானுமாக வாழும் அறவாழ்க்கையே சமய வாழ்க்கை. உலகமும் இதில் புக வாய்ப்பு உண்டு. ஆனால், உலகத் தாக்குதலால் கெடாதபடி காத்துக் கொள்ளவேண்டியது கடமை. இதற்காக அமைந்த வழிகளும் இரண்டே: ஒன்று, உலகத்தை விட்டு ஒதுங்கிப் பூசையும் வழிபாடு மாகத் தனித்து வாழும் வாழ்க்கை. இதுதான் எளியவர் களால் முடிவது. மற்றொரு வழி மிகச் சிறந்த வழியே; உரமும் மாண்பும் உடையவர்கள் இந்த வழியைப் பின் பற்ற முடியும். அதாவது: உலகத்தை ஒதுக்காமல், உலகத்தில் கலந்து நின்று உலகத்தொண்டையே வழி பாடாக அமைத்துக்கொள்வது. என்ன இடையூறு வந் தாலும் தளராமல், புகழ் பழி முதலியவற்றைப் பொருட் படுத்தாமல், குறிக்கோளை மறக்காமல், என்ன வரினும் வருக என்று அஞ்சாமல் வாழும் வாழ்க்கை. காந்தியின் சமயவாழ்க்கை இத்தகைய உரமும் மாண்பும் பெற்ற வாழ்க்கை.

## உண்மைக்காக வாழ்தல்

"மற்றவர்கள் என்ன இடையூறு செய்தாலும் சரி, என் கணவனுக்காக என் வாழ்க்கையைத் தியாகம் செய் வேன்" என்று வாழும் உயர்ந்த மனைவியைப்போல, "மற்ற வர்கள் எங்கள் வாழ்க்கையைக் கெடுக்க எவ்வளவு முயன்றாலும் சரி, என் மனைவிக்காக என் வாழ்க்கையைத் தியாகம் செய்வேன்" என்று வாழும் உயர்ந்த கணவனைப் போல, காந்தி சமய நெறிக்காகத் தம் வாழ்க்கையைத் தியாகம் செய்தார். அவருக்குக் கடவுள் என்றால் ஒரு பெயரல்ல, ஒரு வடிவம் அல்ல; உண்மையையே கடவுள் என்று உணர்ந்தவர் அவர். சமயம் என்றால், சில குறிகள் என்றோ, சில சடங்குகள் என்றோ, சில சொற்கள்

என்றோ, சில நூல்கள் என்றோ அவர் கொள்ளவில்லை. இன்னா செய்யாமை (அஹிம்ஸை) என்னும் அறத்தையே அவர் சமய நெறியாகக் கொண்டார். உலகத்தொண்டையும் தனி வாழ்க்கையையும் பிரிக்கமுடியாதபடி இணைத்துக் கொண்ட அவர் உலகத்தை விட்டு ஒதுங்கவில்லை; உலகத்தின் பெரும் போராட்டத்திற்கு இடையே நின்று உண்மை என்னும் கடவுளை வழிபட்டு இன்னா செய்யாமல் வாழ்ந்தார். சமயத்துறையில் அவர் பெற்ற பெருவெற்றி இதுதான். அதனால்தான் அவர் தம்முடைய வாழ்க்கை நூலுக்கு வேறு பெயர் வைக்காமல், சத்திய சோதனை என்றே பெயரிட்டார். தியாகம் செய்வது என்றே துணிந்துவிட்ட கணவனோ மனைவியோ குடும்ப இடையூற்றைக் கண்டு அஞ்சாமல் மகிழ்ச்சியோடு அதற்குப் பலியாக முந்திக்கொள்வதைப் போல், காந்தி அண்ணலும் உலக வாழ்க்கையில் வந்த இடர்களைக் கண்டு ஒதுங்காமல் மகிழ்ச்சியோடு பலியாவதற்குத் துணிந்து நின்றார். இடர் நெருங்க நெருங்க ஊக்கம் மிகுதியாகக் கொண்டார். சத்தியம் ஒன்றே தம் எதிரில் இருப்பதாகக் கருதினார்; தம்மையும் உலகத்தையும் பொருட்படுத்தாமல் சத்தியத்தையே போற்றினார். உலகத்தாரின் பழி புகழ் விருப்பு வெறுப்பு இவைகளால் அவருடைய மனத்தை மாற்ற முடியவில்லை. உலகமெல்லாம் புகழ்ந்தாலும் மகிழாமல், பழித்தாலும் கவலைப்படாமல், விரும்பினாலும் மயங்காமல், வெறுத்தாலும் துறக்காமல், கொண்ட குறிக்கோளையே பொருளாகப் போற்றினார். இதனால்தான் அவர் ஒழுக்க இமயமாக வாழ முடிந்தது. இதனால்தான் அவர் எண்ணமும் சொல்லும் செயலும் ஒரே தன்மையாக இருக்க முடிந்தது. உள்ளத்தில் உண்மை, வாயில் வாய்மை, செயலில் மெய்ம்மை என்று அவருடைய சத்திய வழிபாடு விளங்கியது.

### உறுதியான நாட்டம்

மற்றவர்கள் காந்தியைப்போல் ஆக முடியவில்லையே என்றால், அவரைப் போல் உணர்ந்து எண்ணவில்லை என்று கூற வேண்டும். இயற்கைப் படைப்பில் கழுத்து நீளவேண்டும் என்று ஒட்டைச்சிவிங்கி விரும்பியதைப் பெற்றது; வாய் நீண்டு திரளவேண்டும் என்று யானை வேட்டதைப் பெற்றது; அலகு வளைய வேண்டும் என்று கிளி தன் தேவையைப் பெற்றது; இவ்வாறே 'எண்ணிய எண்ணியாங்கு எய்துப' என்று திருவள்ளுவர் கூறியது அஃறிணை உயிர்களிடத்திலும் உண்மையாயிருக்கக் காண லாம். ஆகவே, மக்கள் உறுதியாக உணர்ந்தால் ஏன் அடையமுடியாது? பொன்னையும் பொருளையும் போகத் தையும் பலரும் விரும்பி எண்ணுகின்றார்களே, அவர்கள் எண்ணியவற்றைப் பெறவில்லையே என்று கேட்கலாம். பொன்னும் பொருளும் போகமும் படைப்பில் தனியுடை மையாக அமைந்தவை அல்ல; அவை எல்லோர்க்கும் பொதுவானவை; எல்லோரும் பகிர்ந்து பெற்று வாழ விரும்பினால் அந்த எண்ணம் படைப்பின் அமைப்புக் குப் பொருத்தமான எண்ணம். அதுவே நிறைவேறக் கூடியது. அதை விட்டுத் தனித்தனியே பொன்னும் பொருளும் போகமும் பெற எண்ணுவது, ஒட்டைச் சிவிங்கி தன் கழுத்து நீளவேண்டும் என்று விரும்பாமல், மரங்கள் எல்லாம் தான் இருக்கும் இடத்திற்குத் தலை கீழாக வரவேண்டும், அப்போதுதான் தளிர்கள் தன் வாயினுள் நுழையும் என்று விரும்புவதைப் போன்றதே ஆகும். ஆகவே, இவற்றை எல்லார்க்கும் பொதுவாகக் கொண்டு நுகர எண்ணும் எண்ணம் ஒன்றே எய்தக் கூடிய எண்ணமாகும்.

பொருள் முதலியவற்றை விட்டு, அன்பு, அடக்கம், புறங்கூறாமை, கள்ளாமை இன்னா செய்யாமை, வெகு

ளாமை முதலிய அறப்பண்புகளை யாராவது விரும்பியும் பெருமல் ஏமாற்றமடைந்தார்களா? இல்லை. இந்த அற முறைப்படி, காந்தியும் விரும்பினார்; பெற்றார். இவ்வாறே இதற்குமுன் விரும்பி முயன்றவர்கள் எல்லோரும் பெற்றிருக்கின்றார்கள். இன்னும் இவ்வாறே பெற முடியும். ஆனால் எண்ணுவோர் குறைவு; எண்ணி உணர்வோர் மிகக் குறைவு. அறம் என்றும், நன்னெறி என்றும், சமயம் என்றும் வாயால் சொல்வோர் பலர்; ஆனால், பணத்தையும் பதவியையும் புகழையும் உள்ளத்தில் நாடுகின்றார்கள். அவற்றை நாடி அலையும் வேட்கையை இத்துறையில் திருப்பினார்களா? இல்லை. காந்தியோ சத்தியம் அஹிம்சை இந்த இரண்டையுமே போற்றி மற்றவற்றைப் பற்றிக் கவலை இல்லாமல் இருந்தார். இதுதான் அவர் வாழ்க்கையில் தடுமாற்றம் நேராததற்குக் காரணம். எதை உள்ளத்தில் உணர்ந்தாரோ, அதையே வாழ்க்கையில் உறுதியாக நாடினார், உழைத்தார். ஆகவே, எண்ணிய எண்ணியாங்கு எய்தினார்; வாழ்க்கைத் தூய்மை பெற்றார்.

## பண்பாடு

ஓவியக் கலைஞர் ஒருவர் சில மக்களின் உருவங்களைத் தீட்டியிருக்கின்றார். அவற்றுள் ஒன்று மிகப் பெரிய தலையும் சிறிய வயிறும் சிறு சிறு கைகால்களும் உடையது; மற்றொன்று மிகப் பெரிய வயிறும் சிறிய தலையும் சிறு கைகால்களும் உடைய உருவம்; இன்னொன்றில், தலையும் வயிறும் சிறுத்திருக்கக் கைகால்கள் மட்டும் அளவுகடந்து நீண்டிருக்கின்றன. இந்த மூன்று உருவங்களும் பார்க்கப் பார்க்க நகைச்சுவை பயக்கும். பார்த்துப் பார்த்துச் சிரிப்பதற்குப் பயன்படுமே அல்லாமல், வேறு பயன் இல்லை. இவற்றை அடுத்தடுத்துப் பார்க்கலாம் என்று விருப்பமும்

தோன்றும். ஆனால், " இந்த உருவம்போல் என் உடம்பு அமையவேண்டும் " என்று எவரும் எண்ணமாட்டார். அதற்கு மாறாக, " நீ இந்தப் படத்தில் இருப்பதைப் போலவே தோன்றுகிறாய் " என்று யாரையேனும் சுட்டிக் குறிப்பிட்டால், அவர் உடனே சினம் கொள்வார். ஆகவே, விரும்பத் தகாத வடிவம் என்றே ஒவ்வொருவரும் வெறுப் பார்கள் ; ஆனால், தம்மோடு தொடர்பு படுத்தாமல் வேடிக்கையாகப் பார்ப்பது என்ற அளவில் நின்றால், எல்லோரும் சலிப்பு இல்லாமல் பார்த்து மகிழ்வார்கள். இவற்றோடு, இயற்கை அழகு அமைந்த நல்ல படம் ஒன்று இருந்தாலும் அந்தப் படத்தையும் பார்க்கமாட்டார்கள். விலை கொடுத்து வாங்குவது என்று பல படங்களை வைத் தாலும், சிறுமை பெருமை உடைய அந்தச் செயற்கைப் படங்களைப் போட்டியிட்டுக் கொண்டு வாங்குவார்களே அல்லாமல், இயற்கையான இந்தப் படத்தை வாங்க முன் வரமாட்டார்கள். ஆனால், வாழ்க்கையில் வேடிக்கை ஒன்றையே நாடாமல், பண்புநலன்களையும் தேடுகின்றவர் கள், இந்த இயற்கைப் படத்தைத்தான் பொறுக்கி வாங்கு வார்கள்.

இன்று அறிவு ஒன்றையே வளர்த்துச் சிறப்புப் பெற்றுள்ள மூளையர்களை உலகம் தேடுகின்றது ; இசை நாடகம் ஓவியம் காவியம் முதலிய கலைகளில் ஒன்றை வளர்த்துச் சிறப்புப் பெற்றுள்ள கலைஞர்களையும் உலகம் நாடுகின்றது ; அறிவையும் வளர்க்காமல் கலையையும் வளர்க்காமல் பணம் ஒன்றையே வளர்த்துப் பெருக்கி யுள்ள செல்வர்களையும் உலகம் தேடுகின்றது. வெறும் மூளை மட்டும் இருந்தால் உலகத்தில் அமைதியும் இன்ப மும் காணமுடியாது ; வெறுங் கலைமட்டும் இருந்தாலும் முடியாது ; வெறும் பணம் மட்டும் பெருகினாலும் முடி யாது. முடியாது என்பதற்கு வேறு சான்றுகள் தேட

வேண்டியதில்லை. இன்றைய உலகத்தில் மூளையர்க்கும் பஞ்சம் இல்லை ; கலைஞர்க்கும் பஞ்சம் இல்லை ; செல்வர்க் கும் பஞ்சம் இல்லை. ஆயினும் உலகத்தில் அமைதியான இன்ப வாழ்க்கைக்கு வழி இல்லை. தலை மட்டும் பெருத் தவர், இதயம் மட்டும் வளர்ந்தவர், வயிறு மட்டும் பெருத்தவர், கைகால் மட்டும் நீண்டவர் இவர்கள் ஓர் ஊரில் இருந்தால் அந்த ஊர் எப்படி இருக்கும்? நோயாளி களின் உறைவிடமாகத்தான் இருக்கும்.

உடல்நலம் இருந்தால், இப்படித் தலைமட்டும் பெருக் கும் கோணல் வளர்ச்சி இருக்காது ; வயிறு மட்டும் வள ரும குறைபாடும் இருக்காது; உடலெல்லாம் மெலிந்து கை கால்கள் நீளும் நீட்சியும் இருக்காது ; குட்டை வடிவமும் இருக்காது ; நெட்டை உருவமும் இருக்காது. இவை எல் லாம் இயற்கை வளர்ச்சிகள் அல்ல ; பரம்பரை நோயின் காரணமாகவோ, அல்லது புதிய நோயின் காரணமா கவோ இப்படிப் பொருத்தமற்ற கோணல் வளர்ச்சி ஏற்படலாம்.

உலகக் கேட்டுக்குக் காரணமான மூளையர்களும் கலைஞர்களும் செல்வர்களும் இருப்பதற்குக் காரணம் மனநலம் இல்லாத குறையே ஆகும். மனநலம் இருந்தால், மூளை வளர்ச்சி ஓர் அளவாக அமையும் ; கலையும் ஒரு வாறு அளவுபடும்; உழைப்பும் ஒழுங்குபடும். மனநலம்— உள்ளத் தூய்மை—இல்லாத நிலையில் பிறரைச் சுரண்டி வாழச் சூழ்ச்சி செய்வோரிடம் மூளைகள் பெருகும்; மனம் போன போக்காய்ப் புலன்களுக்கு அடிமைகளாய் வாழும் கலைஞர்களிடம் கலைகள் பெருகும் ; செல்வம் என்றால் உழைப்பில்லா வாழ்வு என்று பொருள்படுமாறு, உழைப்பால் பொருள் சேர்வது போய் உழைப்பால் வறுமை சேர்கின்ற தலைகீழ் முறை பெருகும். இது வாழ்க்கையில் காணப்படும் கோணல் வளர்ச்சி.

மன நலம் - உள்ளத் தூய்மை - என்பதற்கு அடிப்படை அறநெறி எனப்படுவது. காந்தியடிகள் வாழ்க்கை அறநெறியே ஓர் உருவம் எடுத்தாற்போன்ற நல்வாழ்க்கை. அவருடைய மூளை தமக்கும் பிறர்க்கும் பயன்படத் தகுந்த கருவியாக வளர்ந்திருந்தது; மற்றவற்றைக் குட்டையாக்கித் தான் மட்டும் கோணலாக வளரவில்லை. அவருடைய கலை தமக்கும் பிறர்க்கும் அமைதியும் ஊக்கமும் ஊட்டத் தக்க அளவாக வளர்ந்திருந்தது; தன்னையும் கெடுத்துப் பிறரையும் மயக்க வல்ல கலையின் கோணல் வளர்ச்சியும் அவரிடம் இல்லை. தமக்காகவும் பிறர்க்காகவும் உழைக்க வல்ல உழைப்பே செல்வமாகக் கொண்டு வளரும் நல்வாழ்வு அவரிடம் இருந்தது. பிறர் உழைக்க அந்த உழைப்பின் பயனைக் கொள்ளை யடித்து இன்பமடையும் கோணலும் அவரிடம் இல்லை.

அவர் வாழ்வை மட்டும் தனியே கருதினால் இந்தச் சிறப்பெல்லாம் விளங்காது. ஒரு பக்கம் அவரைக் கருதி, மற்றொரு பக்கம் அணுக்குண்டுகளையும் நச்சுப் புகைகளையும் கண்டு பெருக்கி வல்லரசுகளுக்கு உதவுகின்ற அறிஞர்களையும் எண்ணிப் பார்க்க வேண்டும். ஒரு பக்கம் காந்தியின் நெறி தவறாத நல்வாழ்க்கையை எண்ணி, மறுபக்கம் பர்ன்ஸ், பைரன், கீட்ஸ் போன்ற புலவர்களின் இடரும் கவலையும நிறைந்த கலைவாழ்க்கையை எண்ணிப் பார்க்க வேண்டும்; இசை நாடகம் முதலிய கலைகளில் இணையற்றவர்களாய்ப் புகழ் பெற்று நூறாயிரக் கணக்காகப் பணம் குவித்தும் புலன்களுக்கு அடிமைகளாய் அலைந்து அலைந்து கலங்கும் சினிமாக் கலைஞர்களையும் எண்ணிப் பார்க்க வேண்டும். உண்மையாக ஆராய்ந்தால், குத்துச் சண்டைக்காக உடலை உரமாக வளர்க்கும் மல்வீரனை மதிக்கும் அவ்வளவிற்குத்தான், இசைக்கலைக்காகச் செவியையும் குரலையும் நுட்பமாக வளர்க்கும் கலை

ஞரையும் மதிக்க வேண்டும்; உணர்ச்சிப் பெருக்குகளைச் சொல்லோவியங்களாக்கித் தரும் கவிஞர்களையும் அவ்வளவில்தான் மதிக்கவேண்டும்; மற்றக் கலைஞர்களையும் அவ்வளவில்தான் மதிக்கவேண்டும். அவர்கள் ஒருவகை ஆற்றலை வளர்த்து உலகத்தாரின் பொழுதுபோக்கிற்கு உதவினார்கள்; இவர்களும் மற்றொருவகை ஆற்றலை வளர்த்து உலகத்தாரின் பொழுதுபோக்கிற்கு உதவினார்கள். அதனால் உலகத்தார் அந்தக் கலைஞரையும் நாடினார்கள்; இந்தக் கலைஞரையும் தேடினார்கள். இன்னும் ஆராய்ந்தால் படங்களில் கோணல் மிகுதியாக ஆக, அவற்றை வாங்குவதில் போட்டி மிகுதி ஆவது போல், இந்தக் கலைஞர்களின் வாழ்க்கையில் புலனடிமைத் தன்மையும் ஒழுக்கக் கேடும் துன்ப நெருக்கும் பெருகப் பெருக, இவர்களின் கலைகளும் உலகத்தாரால் மிகுதியாக விரும்பப்படுகின்றன. எல்லாம் பொழுது போக்கு என்ற அளவிற்கே அல்லாமல், வாழ்க்கைக்காக அல்ல. வாழ்க்கை என்பதே இன்னது என்று உணர இடமில்லாமல், பெரும்பான்மையான மக்கள் கஞ்சிக் கவலைக்கும் பணப் போராட்டத்திற்கும் இரையாகி உள்ள இந்தக் காலத்தில், மக்கள் வேறு எப்படி இருக்க முடியும். அவர்கள் அரிதில் பெறக்கூடிய சிறு வேடிக்கைகளை ஒதுக்க முடியுமா? ஆகையால் கலைஞர்களின் கோணலை உலகம் மேன்மேலும் நாடுகின்றது. ஆனாலும் கோணல் கோணல்தான்.

காந்தியடிகள் மூளையையும் அளவு கடந்து வளர்க்க விரும்பவில்லை. வாழ்க்கைக்கு அது ஒரு கருவி என்று உணர்ந்தாரே அல்லாமல், குத்துச்சண்டைக்காரன் தசைநார்களைப் போற்றுவது போல் அதையே குறிக்கோளாகக் கொண்டு போற்றவில்லை. அறிவுப் பசியும் எல்லை கடந்து போகாமல் ஒரு குறிப்பிட்ட இடத்தில் நிறுத்திக்

கொள்ள வேண்டும் என்பது அவர் கருத்து. தேவை இல்லாத அறிவை மூளையில் திணித்து வைத்துக்கொண்டிருப்பது நல்வாழ்வுக்குக் கெடுதி என்றும் அவர் எழுதியுள்ளார். இந்தக் காலத்துக் கல்வி முறையை அவர் கடிந்ததற்கும் அடிப்படைக் காரணம் இதுதான். கலைகளை வளர்ப்பது என்று அதற்காகவும் அவர் பெருமுயற்சி செய்யவில்லை. வாழ்க்கையே உயர்ந்த கலை என்று தெளிந்த அறவோர் ஆகையால், புலனடக்கத்திற்கு இடையூறு செய்யாத அளவிற்கே இசை முதலிய கலைகளையும் காவியங்களையும் போற்றினார். மனநலத்திற்கு இடையூறான கலை எதுவானாலும் வேண்டாம் என்று ஒதுக்கினார். அது காவியப் பகுதியாக இருந்தாலும், இசை நாடகம் முதலிய மற்றக் கலைப்பகுதியாக இருந்தாலும், தகாததை ஒதுக்கித் தள்ளினார். உழைப்பில்லாமல் உண்டு வளர்வதும் தீங்கு, அளவுக்கு மீறிப் பேசுவதும் தீங்கு, வரம்பு இல்லாமல் உழைப்பதும் தீங்கு என்று உணர்ந்து, வாழ்வை ஒழுங்குபடுத்திக் கொண்டு வாழ்ந்தார்; உழைப்பையே செல்வமாகக் கொண்டு போற்றினாரே அல்லாமல், மனநலத்தைக் கெடுக்கக் கூடிய பொருட் செல்வத்தைக் குவிக்கவில்லை; அதனால் தான் தேவையைப் பெருக்காமல் எளிய வாழ்க்கை வாழ்ந்தார்.

## நிறைந்த வாழ்வு

இந்த உண்மையையே வேறொரு வகையாகவும் காணலாம். மனித உடம்பில் மூளை, இதயம், வயிறு, கைகால்கள் இவை சிறந்த பகுதிகள். மூளைக்கே பயிற்சி கொடுத்து மற்றவற்றைப் புறக்கணிக்கின்றவர்கள், உடல் மெலிந்து, இரத்த ஓட்டம் குறைந்து, பசியும் குறைந்து, சிறு வேலையும் மேற்கொண்டு உழைக்க முடியாதவர்களாக மாறுகின்றார்கள். மூளைப் பயிற்சி இல்லாதவர்களோ நெடு

மரங்களாக வளர்கின்றார்கள். கதை, இசை, நாடகம் முத லிய கலைகளால், அல்லது நினைத்தபோதெல்லாம் உருகிக் கண்ணீர்விடுவதால், நெகிழ்ச்சி மிகுந்து இதயத்தைமட்டும் வளர்த்தவர்கள், விருப்பு வெறுப்பு மிகுந்தவர்களாய் எந் நிலையிலும் அமைதி அடையாமல் வாழ்க்கையையே வீணாக் கிக்கொள்கின்றார்கள். உணர்ந்து உருகும் நெஞ்சம் இல்லா தவர்களோ கற்பாறைகள் போல் வாழ்கின்றார்கள். உண்ணவே உயிர்வாழ்கின்றோம் என்று நம்பி வயிறார உண்டு வளர்கின்றவர்களுக்கு உடல் பருமை பெறலாமே அல்லாமல் உரம் பெறுவதில்லை; மூளையோ சிறிது நேரமும் சிந்திக்க முடியாமல் மெலிந்து போகின்றது. பட்டினியால் வாடுகின்றவர்களோ எலும்புக் கூடுகளாக மாறுகின்றார் கள். கைகால் உழைப்பிலேயே பகலெல்லாம் கழித்துக் கஞ்சிக்கு அலையும் மக்களுக்கோ, உடல் உரம் பெறலாம்; ஆனால் மூளையோ கூர்மை இழக்கின்றது; விலங்குக்கு அடுத்த நிலையிலேயே வாழ்க்கையை நடத்த நேர்கின்றது. உழைப்பு அற்றவர்களோ நோய் மூட்டைகளாகக் கிடக் கின்றார்கள். ஆகவே, ஒன்றைப் போற்றி மற்றொன்றைப் புறக்கணிப்பதன் தீமை பொல்லாததாக இருக்கின்றது. ஆனாலும், இந்தக் கோணல் வளர்ச்சிதான் இந்த நாகரிக நூற்றாண்டில் அளவில்லாமல் பெருகிவருகின்றது. இந்தக் குறையெல்லாம் தெளிவாகப் புலப்படுமாறு உல கத் தலைவராக—உலகத்தார்க்கு ஒரு பெரிய எடுத்துக் காட்டாக—வாழ்க்கையை நடத்திக் காட்டினார் காந்தி அண்ணல். அறிவு வளம் பெற்ற மூளை, உணர்வு நலம் பெற்ற இதயம், குறைந்த அளவில் உண்டு நிறைந்த பய னைத் தரும் வயிறு, தொண்டு செய்யும் ஆற்றலும் நோயற்ற நிலையும் அமைந்த கைகால்கள் ஆகிய இவை களே அவர் பெற்றிருந்த கருவிகள். இந்தச் சிறப்பு இருந்ததால்தான் அவர் தூய முழுவாழ்க்கை வாழ முடிந்

தது ; வாழ்க்கையையே ஒரு நல்ல நூலாக, ஒரு தனிக் கலையாக, தொண்டு நிலையாக அமைத்துக் காட்ட முடிந்தது. அரசியல் சிக்கல்களை உடைத்துப் பழுதுபார்க்கும் அறிவாற்றல், ஏழைகளைக் கண்டு இரங்கும் இரக்க உணர்வு, குழந்தைகளோடு விளையாடும் கலையுணர்வு, வேளைதோறும் நோன்பாக உண்டு நோயற்று விளங்கிய வயிறு, முதுமையிலும் இளமையின் ஊக்கம் காட்டிய கை கால்கள் இவைகளைப் பெற்றிருந்த பெருவாழ்வு அது.

புலனடக்கம்

'யான்' என்னும் செருக்கு (அகங்காரம்) இல்லாமல் வாழவேண்டும் என்பதற்காக அறிஞர்கள் பலவகை முயற்சிகளை மேற்கொள்கின்றார்கள். சிலர் 'யான்' அல்லது 'நான்' என்ற சொல்லின்மேல் தீராப் பகைகொண்டு அந்தச் சொல்லையே நாவால் சொல்லாமல் வாழ முயல்கின்றார்கள். 'நான் முன்னமே சொன்னேன்' 'எனக்கு வேண்டாம்' 'நான் நம்பமாட்டேன்' 'என்னை எதிர்த்துப் பேசினான்' என்பது போன்ற வாக்கியங்களை அவர்கள் பேசுவதில்லை. அவற்றிற்கு ஈடாக, 'இது முன்னமே சொன்னது' 'இதற்கு வேண்டாம்' 'இது நம்பாது' 'இதை எதிர்த்துப் பேசினான்' முதலான வாக்கியங்களைப் பேசுவார்கள். எப்படியும் அவர்கள் செய்யும் மாறுதல் எல்லாம் 'நான்' என்ற சொல் இல்லாமல் செய்வது ஒன்றே. 'நான்' என்ற சொல்லுக்கு ஈடாக 'இது' என்று தம்மைக் குறித்துக் கொள்வார்களே தவிர, 'நான்' என்ற எண்ணம், 'நான்' என்று எண்ணிச் செய்யும் செயல் இந்த இரண்டும் அவர்களை விட்டு நீங்குவதில்லை. அகங்காரம் பேச்சளவில் இல்லையே தவிர, எண்ணத்திலும் செயலிலும் உண்டு.

'நான்' என்ற செருக்கை ஒழிக்கவேண்டும் என்று பெரியோர்கள் அறிவுறுத்தியது ஏன்? அது ஒரு பொய். உடம்பும் உள்ளமும் உயிருமாய் வாழ்கின்ற ஒருவன், உடம்பைத் தான் என்று எண்ணிக் கொண்டும், மனத்தைத்தான் என்று எண்ணிக் கொண்டும் 'நான்' 'நான்' என்று வாழ்வது 'பொய்' அல்லவா? இந்தப் பொய்யைத் தான் அநியாயம் என்று தாயுமானவரும் குறிக்கின்றார். 'அநியாயமாய் இந்த உடலை நான் என்று வரும் அந்தகற்கு ஆளாகவோ' என்று முறையிடுகின்றார். காந்தியடிகள் வெறுஞ் சொல்லோடு போராடாமல், செருக்கை ஒழிக்க முனைந்தார்; வெற்றி பெற்றார். உடம்பு, உள்ளம் என்பவற்றின் இயல்பை உணர்ந்து உயிர் (ஆத்மா) தான் என்று வாழ்க்கை நடத்தினார். உடம்பும் உள்ளமும் கட்டுப்பட்டு அடங்கி நடக்குமாறு வாழ்ந்தார். உடம்பில் உள்ள புலன்களை அடக்கி ஆளும் திறமை பெற்றார். உள்ளம் தூய்மை பெற்று விளங்கச் செய்தார். இவ்வாறு அவர் பெற்றிருந்த புலனடக்கமும் உள்ளத் தூய்மையுமே 'யான்' என்னும் செருக்கை அறுப்பதற்கு அவர் கையாண்ட முறை; வெறுஞ்சொல் மாறுதல் அல்ல; வாழ்க்கை மாறுதல் ஆகும்.

வாழ்வுக்காக உள்ளமும் வேண்டும், உடம்பும் வேண்டும் என்று ஒழுங்குபடுத்திக் கொண்டு வாழ்வதே 'நான்' என்ற செருக்கற்ற வாழ்க்கை. மனம்போன போக்கெல்லாம் அலைந்து, புலன் விரும்பும் வழியெல்லாம் ஓடுவதே 'நான்' என்ற செருக்கை வளர்க்கும் வாழ்க்கை. இதை உணர்ந்தவர் காந்தி. அதனால்தான் 'நான்' என்ற சொல்லோடு போர்க்களத்தில் இறங்காமல், புலனடக்கமும் உள்ளத் தூய்மையும் காப்பதே கடமையாகக் கொண்டு விழிப்போடு நடந்தார். எந்தக் கலையானாலும் மனத்திற்கு அமைதி நல்குகின்றதா, அல்லது மனத்தைப்

பண்படுத்தும் உண்மைகளைக் கற்பிக்கின்றதா என்று நாடியே அவற்றைப் போற்றினர். ஆடை முதலியவற்றி லும் இவ்வாறே வாழ்வுக்கு வேண்டிய தேவையை அளவு படுத்திக்கொண்டே வாழ்ந்தார். வெறும் பருத்தி ஆடை யிலேயே அமைதி உற்றார். வெண்ணிற ஆடையே போதும் என நின்றார். ஊற்றின்பம், காட்சி யின்பம், மதிப்பின்பம் முதலிய இன்பங்களை நாடிப் பட்டாடை உடுத்திப் போற்றுவோர் மலிந்த இந்த உலகத் தில் 'பட்டு இந்த உடம்புக்கு வேண்டாம்' என்று வெறுத்து ஒதுக்கிய வீர வாழ்க்கையைக் காந்தியடிகளிடம் காணலாம். 'எல்லா உயிரும் இறைவன் குடும்பம்' என்றும், 'சீவகாருணியமே சிறந்த ஒழுக்கம்' என்றும் சொல்லிக்கொண்டு, பட்டுப்பூச்சிகளை ஆயிரக்கணக்கில் கொல்வதால் கிடைக்கும் பட்டாடை உடுத்துகின்றவர் களை ஒரு பக்கம் வைத்து, உடம்பின் தட்ப வெப்பத்தைக் காக்கவும் மானத்தை மறைக்கவும் ஓரளவு ஆடை போதும் என்று வெண்ணிறப் பருத்தி ஆடையையே போற்றிய அவரையும் ஒரு பக்கம் வைத்து எண்ணினால் அவருடைய வாழ்க்கைத் தூய்மை விளங்குகின்றது.

## நாவடக்கம்

புலனடக்கத்தில் காந்தியடிகள் ஓர் இமயமலை என் பதை விளக்க அவர் பெற்றிருந்த நாவடக்கம் ஒன்றே போதுமானது 'யாகாவா ராயினும் நாகாக்க' என்றார் திருவள்ளுவர். யாவும் காத்து நாவும் காத்தவர் காந்தி யடிகள். மறந்தும் தீய சொல் பிறவாத நாக்கு, பிறர் உள்ளத்தைப் புண்படுத்த அறியாத நாக்கு, நகைச்சுவை கருதியும் இழிசொல் பயிலாத நாக்கு அவர் நாக்கு. உள் ளத்திலே பொய் இல்லை, வஞ்சம் இல்லை, கரவு இல்லை, பகை இல்லை, பொறாமை இல்லை ; ஆகையால் அவருடைய

நாக்கில் பொய்யோ, வஞ்சகமோ, கரவோ, பகையோ, பொறாமையோ உள்ள சொல் பிறக்கவில்லை. தீமையும் கொடுமையும் அற்ற நகைச்சுவையே அவர் நாவில் பிறந்தது. பிறர் மனத்தைத் தாக்கும் வகையில் அவர் எள்ளிப் பேசியது இல்லை. எள்ளி நகையாடுவதன் மூலமாகப் பிறரைத் திருத்தமுடியும் என்று பெர்னார்டுஷா நம்புகின்றார். ஆனால், மற்றவர்களைத் திருத்தவேண்டும் என்ற நோக்கம் பற்றியும் காந்தியடிகள் அதைக் கையாண்டது இல்லை. இதுவே இல்லையானால், வேறு சுடுசொல் அவரிடமிருந்து பிறந்திருக்குமோ ?

அன்பால்தான் திருத்தமுடியும் என்று இன்னா செய்யாமையை (அஹிம்சையை) வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்ட காந்தியடிகள் நாவாலும் இன்னா செய்யாதவாறு காத்துக்கொண்டார். அதனால்தான் பிறர் மனம் நோக எள்ளி நகையாடும் முறையைக் கடிந்து ஒதுக்கினார். மறந்தும் தீய சொற்களைச் சொல்லாதபடி நாவடக்கம் கொண்டார். பயனுடைய சொற்களை மட்டும் பயின்றார். ஆக்க வேலைக்குப் பயன்படுமா என்று சொற்களை அளவுபடுத்தி வழங்கினார். வாரத்திற்கு ஒருநாள் மௌன நோன்பு கொண்டு சொல்லற்ற நிலையில் நாவைப் பழக்கினார்.

மக்களுடம்பில் தலை சிறந்த உறுப்பாகும். அதில் ஐம்புலனும் அமைந்துகிடக்கின்றன. மெய் வாய் கண் மூக்குச் செவி எல்லாம் இருக்கின்றன. இவற்றுள் மூக்கு முகர்வுப் புலனுடையது ; ஆனாலும் உயிர் வாழ்வுக்குக் கட்டாயமாக வேண்டியதாக மூச்சுவிடும் தொண்டுக்கு ஓயாமல் பயன்படுவதாக உள்ளது. செவி இரண்டும் திறந்தபடியே அமைந்துள்ளன. கண்ணும் வாயும் அவ்வாறு இல்லாமல், மூடவும் திறக்கவும் அமைந்துள்ளன. படைப்பின் நோக்கம் என்ன என்பதை இவற்றின் அமைப்

யிலிருந்தே உணரலாம். யார் என்ன சொன்னாலும் கேட்டுக்கொண்டிருக்கலாம்; ஆராய்ந்து எடுத்துக்கொள்ளும் பொறுப்பு அறிவுக்கு இருக்கவேண்டும்; இதற்காகவே செவிகள் திறந்த நிலையிலே அமைந்துள்ளன. கண்கள் இரண்டும் அவ்வாறு இல்லை. உறங்கும் நேரம் தவிர, மற்ற நேரமெல்லாம் மூடி மூடி இமைத்துப் பார்க்கும் நிலையில் உள்ளன. பெரும்பான்மையும் கண் திறந்து காணும் நிலைமையும் இடையிடையே சிறுபான்மை மூடி இமைக்கும் நிலைமையும் உண்டு. ஆகவே எல்லாவற்றையும் கண்டு ஆராயலாம், ஆனால் சில தீமைகளைக் காணுவதும் கூடாது என்பதே நோக்கம்; காணத் தகாதன எதிர்ப்பட்டபோது காணக் கூசவேண்டும், அதற்காகவே நினைத்தவுடனே இமைகளை மூடிக்கொள்ளும் ஆற்றலும் அமைந்துள்ளது. வாயைப் பொறுத்தவரையிலோ, பெரும்பான்மையும் மூடிக்கிடப்பதே இயல்பான நிலை. சிறுபான்மை, எப்போதோ ஒரு வேளை, காரணம் நேர்ந்தபோது மட்டும் திறந்து தொழிலாற்றுவதே வாயின் கடமை. நினைத்த போதெல்லாம், நினைத்ததையெல்லாம் பேசுவதும் கடமை அல்ல, விரும்பியபோதெல்லாம், விரும்பியதையெல்லாம் தின்பதும் கடமை அல்ல.

திருவள்ளுவர் வாயின் கடமையாகிய இந்த இரண்டில் ஒன்றையே "யாகாவா ராயினும் நாகாக்க" என்ற வாய்மொழியில் விளக்கினார். மற்றொன்றைப் பற்றி "மருந்து" என்ற அதிகாரத்தில் சுருக்கமாகத் தெரிவிக்கின்றார். காந்தியடிகளின் வாழ்க்கையில் இருவகை நாவடக்கமும் சிறந்து விளங்குகின்றன. நாவால் வெளிப்படும் சொல்லிலும் அடக்கம்; பயன் கருதிய தொண்டுக்கே பயன்படுத்தும் ஆற்றல். நாவால் உட்கொள்ளும் உணவிலும் அடக்கம்; உடல்நலம் கருதிய அளவுக்கே பயன்படுத்தும் ஆற்றல். திருவள்ளுவர் புலனடக்கத்தை வற்

புறுத்தும்போது, அந்தச் சிறப்புக்கு அடிப்படையாக "யாகாவா ராயினும் நாகாக்க" என்றார். காந்தியடிகள் புலனடக்க நெறியில் தலைமை பெற்று விளங்கும் பிரம சரிய ஒழுக்கத்தைப் போற்ற விரும்புவோர்க்கு வழி கூறும்போது, நாவின் சுவைக்கு அடிமையாகின்றவன் பிரமசரிய ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க முடியாது என்றார். சொற் குற்றம் வராமல் காப்பதற்கு வழியாக, "காவாக் கால் சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" என்று திரு வள்ளுவர் அறிவுறுத்தினார். காந்தியடிகள் ஒழுக்கக் கேடு வராமல் காப்பதற்கு அடிப்படையாக, "சுவை விரும்பி நாக்கிற்கு அடிமையாகின்றவன் ஒழுக்கம் காத்து வாழ முடியாது" என்று அறிவுறுத்தினார்; சொல்லடக்கமும் சுவையடக்கமுமாகிய இருவகை நாவடக்கமும் அவருடைய வாழ்க்கையில் விளங்கியிருந்தன.

உடல் வளர்ச்சிக்கும் உடல் நலத்திற்கும் வேண்டிய சத்துள்ள நல்ல உணவை உண்ணவேண்டுமே தவிர, பலவகைச் சுவையுணர்வுகளை வளர்த்து நாக்கிற்கு அடிமை யாக வாழக்கூடாது என்பது அவர் அறிவுறுத்திவந்த கொள்கைகளில் ஒன்றாகும். 1916 ஆம் ஆண்டில் சென் னைக்கு வந்திருந்தபோது மாகாணக் கல்லூரியை அடுத் துள்ள விக்டோரியா உணவுவிடுதியைப் பார்த்து வருந் தினார். அந்த மாணவர்உணவுவிடுதியில் பலவகைச் சமைய லறைகள் இருந்தலையும், அவை சாதிக்கொரு சமைய லறையாகவும் இருக்காமல், தமக்குப் பழக்கப்பட்டவாறு மிகுதியான அல்லது குறைவான காரம் முதலியவற்றைச் சேர்த்துச் சமைக்கும் சமையலறைகளாக இருந்தலையும், ஒரே சாதியாராக இருந்தாலும் வேறு வேறு சமையலை விரும்பியதையும் அவர் உணர்ந்தார். மக்கள் நாக்கை ஆளும் உரிமை பெறாமல், நாக்கின் சுவையுணர்வுக்கு இப்படி அடிமையாகக் கூடாது என்றும், விலங்குணர்ச்சி

களை வெல்லவேண்டுமென்று நாடுகின்றவன் நாக்கின் சுவையுணர்வை அடக்கி ஆளும் ஆற்றல் பெறவேண்டும் என்றும் விளக்கினர். இல்லையானல், மக்கட் பிறப்பில் பெற்றுள்ள நன்மையை இழக்கவேண்டும் என்றும், விலங்குகளையும் காட்டுமிராண்டிகளையும்விட இழிவான வாழ்க்கையே நேரும் என்றும் கூறினர். குதிரையோ, பசுவோ, வேறு விலங்கோ இவ்வாறு சுவைக்கு அடிமைப் பட்டு வாழ்வதில்லையே என்றும் சுட்டிக்காட்டினர். பிரம சரிய ஒழுக்கத்தை அவர் வற்புறுத்திக் கூறிய இடங்களி லெல்லாம்,"புலனடக்கமே அதன் வழி என்றும், நாக்கு மிக்க குற்றத்திற்குக் காரணமாக இருப்பதால் அதை அடக்குவோன் எதையும் அடக்கமுடியும் என்றும் விளக்கி யுள்ளார். நாள்தோறும் என்ன என்ன தின்னலாம என்று எண்ணிக் குடும்பத்தை நடத்துவது தீங்கு என்றும், எல்லோருக்கும் பொதுவாகப் பொதுச் சமையலறை ஏற் படுத்தினல் இந்தக் கவலை ஒழியும் என்றும், நாக்கால் பாவம் செய்யும் வழக்கம் அழியும் என்றும் விளக்கியிருக் கின்றார். இன்னும் ஒரு படி மேலே சென்று, சமையல் வேலையும் இல்லாத வகையில், சூரியன் என்ற பெரு நெருப் பில் வெந்த உணவாகிய பழவகைகளை உண்பது சிறந்த முறை என்றார். அவரைப் பொறுத்த வரையில் இத்தகைய அரிய வாழ்க்கையை நடத்திக் காட்டினர்.

### அடக்கம் ; ஒடுக்கம் அல்ல

புலனடக்கம் என்பது புலன்களுக்கே வாழ்வு இல்லாதபடி வாட்டுதல் அல்ல. காடும் மலையும் ஓடி ஒதுங்கி உணவைச் சுருக்கிப் புலன்களை ஒடுக்குதல் அல்ல. வாழ்விற்கு நன்மை செய்யக்கூடிய வகையில் அறநெறியில் நின்று ஒழுகும் அளவில் - புலன்களை இயக்குதலும்,

தவறிய வழியில் செல்லாதபடி அடக்கியாளுதலுமாகும். அதனால்தான் திருவள்ளுவர் "ஆமைபோல் ஐந்தடக்கல்" என்று ஆமையை எடுத்துக்காட்டாகக் கூறினார். தீமைக்கு அஞ்சும்போது ஐந்து உறுப்புக்களையும் ஆமை தன்னுள் அடக்கிக்கொள்கின்றது. தீமை இல்லை என்று அறிந்து உரிமை தரும் நிலையில்தான் அவற்றை வெளியே நீட்டுகின்றது. இவ்வாறு வாழும் வாழ்க்கையே புல னடக்கம் என்பது. கண்ணையும் காதையும் அடைத்துப் பயன்படாதவாறு செய்து உடலை ஒடுக்குதல் புலனொடுக் கமே அல்லாமல் புலனடக்கம் அல்ல. ஆற்றலுள்ள வரையில்தான் அடக்கம் என்பது ஒழுக்கமாகும். ஆகை யால் காந்தியடிகளின் வாழ்க்கையில் கண்டது சிறந்த புலடனக்கமாகிய ஆற்றல் மிக்க ஒழுக்கமாகும். நா முதலியவற்றை அடக்கி யாண்ட அவர் அவற்றை எவ்வளவு பயன்படுத்தியிருக்கின்றார் என்பதை எண்ணி னால் வியப்பு உண்டாகும். அவர் சொல்லும் சொல்லைக் கேட்க மக்கள் குழுமியதுபோல் பெருங் கூட்டம் வேறு எவர் சொல்லும் சொல்லுக்கும் கூடவில்லை. எத்தனையோ கூட்டங்கள், எத்தனையோ ஆண்டுகள், எத்தனையோ பொருள்கள் - இவை எல்லாவற்றிலும் அவருடைய நாக்கிற்கு வேலை இருந்தது. பலகோடிமக்களின் வறுமைத் துன்பத்தையும் பிற துயரங்களையும் காணவும் கேட்கவும் அவருடைய கண்ணுக்கும் செவிக்கும் ஓயா வேலை இருந்து வந்தது. தள்ளாத முதுமையிலும் அங்கும் இங்கும் சென்று அலைந்து தொண்டு செய்யும் கடமை அவருடைய மெல்லிய உடலுக்கு ஓயாமல் இருந்து வந்தது. அடக்கி யாள்வதில் அரிய வெற்றி பெற்ற அவரே அவற்றை அளவற்ற தொண்டுகளில் ஓயாமல் ஈடுபடுத்தி உழைக்கச் செய்திருக்கின்றார். இதுவே அவருடைய சிறப்பியல்பு ஆகும்.

## உள்ளத் தூய்மை

'யான்' என்னும் செருக்கை ஒழிப்பதற்கு உரிய மற்றொரு கருவி உள்ளத்தூய்மை. தன்னலமே உள்ளத்தின் மாசு. அருளே உள்ளத்தின் தூய்மை. உள்ளத்தில் பொறாமை இல்லாதவாறு, வஞ்சம் எழாதவாறு, பகை தோன்றாதவாறு ஒவ்வொன்றாகக் காத்துக்கொள்வதால் உள்ளத்தூய்மை வளரும். இவற்றைவிடச் சிறந்த முறை ஒன்று; அதுதான் தன்னலத்தை ஒரே அடியாக அகற்ற வல்ல அருள்; தொடர்பு இல்லாதவர்களிடத்திலும் செலுத்தும் அன்பு. இதைப் பெற்றோமா இல்லையா என்பதற்கு ஒரு தேர்தல் வேண்டுமானால், நெஞ்சத்தில் பகை இருக்கின்றதா இல்லையா என்று ஆராயவேண்டும். திக்கற்ற ஒருவன் பட்டினியால் வாடிக் கிடப்பதையோ, அடிபட்டு இரத்தம் சொரிவதையோ கண்டால், யாருக்குத்தான் அன்பு தோன்றாது? அது இயற்கை. ஆனால், அங்கே தன்னலம் தோன்றுமானால் அன்பு மறைந்துவிடும்; தன்னலம் இருந்தால் இரக்கமற்ற வன்னெஞ்சம் வாழும். ஆகவே, யாரோ ஒருவரிடத்தில் செலுத்தும் அன்பை உணர்ந்து உள்ளம் தூய்மை பெற்றுவிட்டது என்று நம்பக்கூடாது. அதனால்தான், ஏசுநாதர் "எல்லோரையும் நேசி" என்று கூறுவதைக் கடந்து, "பகைவரை நேசி" என்றார். திருவள்ளுவர் "எல்லோர்க்கும் இனியவை செய்" என்று விளக்குவதைக் கடந்து, "இன்னாசெய்தார்க்கும் இனியவே செய்" என்று விளக்கினார். தன்னலம் ஒன்று தனியரசு செய்யவேண்டிய இடம் தன் பகைவரிடமே ஆகும். அங்கே தன்னலம் செத்துவிட்டதா என்பதை ஆராய்ந்து உணர விரும்பியே பெரியோர்கள் அவ்வாறு அறிவுறுத்தினார்கள். காந்தியடிகள் இத்தகைய தூய நெஞ்சம் பெற்றவர். பல் ஒடியுமாறு தன்னை

உதைத்தவரையும் சினந்து பார்க்காதவர்; வெறுத்துப் பேசாதவர்; அவரைப் பிடித்து ஒறுக்கவேண்டும் என்று பிறர் பரபரப்புக் கொண்டபோதும், இரத்தம் சொரியும் வாயோடு கீழே விழுந்துகிடந்த நிலையிலும், "அவரை ஒன்றும் செய்யவேண்டாம், அவரைத் துன்புறுத்தவேண்டாம்" என்று இரக்கமிகுந்த குரலில் வேண்டிக்கொண்ட பெருந்தன்மை உடையவர். வெடிகுண்டு வைத்துச் சுட்டழிக்க முயன்றவர்களையும் இரக்கத்தோடு எண்ணி அன்பு செலுத்தி "அவர்களை ஒறுக்கக் கூடாது" என்று எண்ணவல்ல தூய அருள் நெஞ்சம் பெற்றவர்.

# 2

# தொண்டு

## தேவையைக் குறைத்தல்

'யான்' என்னும் செருக்கை அறுத்தவர்களுக்கு 'எனது' என்னும் செருக்குத் தானே ஒழியும். உடம்பையே இறைவன் அருளிய கருவி என்று எண்ணும் மனம், உடைமையைப் பற்றி என்ன எண்ணும்? வீடும் வாசலும் நிலமும் புலமுமாக உள்ள சொத்தே ஆனாலும், காசும் நகையுமாக உள்ள செல்வமே ஆனாலும், எல்லாம் இறைவனுக்கு உரிய பொருள், உலகத்தார் எல்லார்க்கும் உரிய பொதுப்பொருள் என்ற எண்ணமே அந்த மனத்திற்குத் தோன்றும். காந்தியடிகள் அவ்வாறு கருத்தளவில் கருதியதோடு நிற்காமல், செயலளவிலே செய்து காட்டினார். தம் உடம்பை மக்களுக்குத் தொண்டு செய்யும் கருவி ஆக்கிக் காட்டினார்; தம்மிடம் உள்ளதை மக்களுக்கு நன்மை செய்யும் துறையில் செலவு செய்துவிட்டுக் கையில் காசு அற்றவராய்த் திரிந்தார். மக்களிடமிருந்து பொதுத் தொண்டுக்காகத் திரட்டும் பொருளையும் அவ்வப்போதே உரிய தொண்டர்களிடம் சேர்த்துவிட்டார். மற்றச் செல்வர்களுக்கு வழிகாட்ட நேர்ந்தபோதும், "இந்தச் சொத்து உங்கள் தனி உரிமை என்று எண்ணுவது பாவம்; நீங்கள் இதை நல்வழியில் செலவு செய்யும் உரிமையை மட்டும் பெற்றிருக்கின்றீர்கள். ஆகையால், இது உங்களிடம் இருக்கும் வரையில் அறக்காப்பாளர் (தருமகர்த்தா) என்று எண்ணி வாழவேண்டும். அதுவே

கடமை" என்று அறிவுறுத்தினார். இந்த அறிவுரையை ஏற்று நடப்பவர் இல்லாமல் இருக்கலாம். அடிகளைப் போல் பண்பட்ட நெஞ்சம் உடையவர்கள் செல்வர்களாக வாழ்ந்தால் அப்படி வாழ முடியும். ஆனால், அவர்கள் செல்வர்களாக வாழ்வதே அருமை. ஆகையால், அவர் அறிவுறுத்தியதை உலகம் கேட்கவில்லையே என்றால், உலகம் பணவேட்டைக்கு இரையாகியுள்ளது என்பதே அதிலிருந்து கற்கவேண்டிய உண்மை.

தேவையைக் குறைத்துக்கொள்வது மற்றொரு வழியாகும். டால்ஸ்டாய் என்னும் சான்றோர் அறிவுறுத்திய அரிய பாடம் இது. "வேண்டாமை அன்ன விழுச் செல்வம் ஈண்டு இல்லை" என்று திருவள்ளுவர் கூறியதும் இதனை உறுதிப்படுத்தும். காந்தியடிகள் தேவையைக் குறைத்துக்கொண்டு மனத்தைப் பண்படுத்தியவர். தேவையைப் பெருக்குவது மாயை என்பது அவர் கருத்து. 'எனது' என்று எண்ணத்தக்க பொருள்களாகச் சிலவற்றையே அவர் வைத்துக்கொண்டு வாழ்ந்தார். அவையும் நிலையாமை உடையவை, சில காலம் பயன்பட்டுப் பிரியக்கூடியவை, இறைவன் தந்தவை என்று தெளிந்திருந்தார்.

## ஒப்புரவு

வங்காளத்தில் இந்து முஸ்லீம் கலகம் நடைபெற்ற போது, நவகாளிப் பகுதியில் சிறு சிறு கிராமங்களின் மூலை முடுக்குகளில் ஒரு மெல்லிய உருவம் ஓயாமல் திரிந்து தொண்டு ஆற்றியது. எண்பது ஆண்டுகளை நெருங்கும் முதுமையில் தனியே வாழ்வது - அதிலும் கலகம் நடைபெறும் பகுதிகளில் தன்னந் தனியாகத் திரிவது - உதவிக்கும் துணைக்கும் ஒருவரும் இல்லாமல் திக்கற்றவராகத் தனியே கொம்பு ஊன்றிக் கொண்டு நடமாடுவது - மத

வெறிக்கு இரையாகி அமைதி இழந்து கொதிக்கும் மக்களிடையே சமரச சன்மார்க்கத்தைப் பேசிக்கொண்டு அன்பைப் பரப்ப வேண்டுமென்று தனியே இருப்பது கூடாது கூடாது என்று பலரும் எண்ணினார்கள். ஆனால் அந்த மெல்லிய உருவம் இத்தனைத் தடைகளையும் பொருட்படுத்தாமல், எள்ளளவும் அஞ்சுதல் கொள்ளாமல், கொம்பை ஊன்றிக் கொண்டு முன் பின் நடந்தறியாத மூலை முடுக்குகளில் நடமாடியது. இது உலக வரலாற்றில் கண்டறியாத புதுமையாகவே விளங்குகின்றது. இத்தகைய அஞ்சாமையும் உறுதியும் அண்ணலிடத்தில் காணப்பட்டதற்குக் காரணம் என்ன ?

பிறருக்கு உதவியாகும் முறையில் வாழும் ஒப்புரவு மிக உயர்ந்த பண்பாகும். அதைப் பற்றித் திருவள்ளுவர் கூறும்போது, ஒப்புரவால் வாழ்க்கையே கெடுமானாலும் அந்தக் கேட்டை அடைவதற்காக வாழ்க்கையையே விற்றுவிடலாம் என்கின்றார்.

> ஒப்புரவினால் வரும் கேடெனின் அஃதொருவன்
> விற்றுக்கோள் தக்கது உடைத்து.

ஒப்புரவு வாழ்க்கையை விடச் சிறந்தது, அதனால் வாழ்க்கையில் எவ்வளவு அழிவு வந்தாலும் ஒப்புரவு காரணமாக ஏற்றுக் கொள்ளலாம் என்பதே அவர் கருத்து. நவகாளிப் பகுதியில் கிராமம் கிராமமாக, தெருத் தெருவாக, வீடு வீடாக, தடியை ஊன்றித் தனியே நடந்துசென்ற அண்ணலைப் பற்றி எல்லோரும் பெருங்கவலை கொணடார்கள். மதவெறி கொண்டவர்கள் எந்த நேரத்திலேனும் தாக்கினால் தடுப்பவர் யார் என்று கவலைப்பட்டார்கள். போலீஸ் முதலிய காவல்களையோ, தற்காப்பு முறைகளையோ அவர் வெறுத்தார்; தடுத்தார்; புறக்

கணித்தார். ஆனால், அவருடைய அரிய வாழ்க்கை எந்த நொடியில் என்ன ஆகுமோ என்று எல்லோரும் அஞ்சினார்கள். ஆயினும், தம் உயிரைப் பணயமாக வைத்தே அவர் அந்த ஒப்பற்ற தொண்டை மேற்கொண்டார். தெருவெல்லாம் உயிரை விலைகூறி விற்று அமைதியை வாங்க முனைந்த துணிவுதான் அப்போது அவரிடம் காணப்பட்டது.

அஞ்சாமை

தம் வாழ்வைப் பற்றி எள்ளளவும் பொருட்படுத்தாத பெருமை அவருக்கு இயல்பாக அமைந்திருந்தது. 1930 - ம் ஆண்டில் எரவாடா சிறையிலிருந்தபோது, ஆசிரமத்தார்க்கு அவர் எழுதிய கடிதம் ஒன்றில் பின் வருமாறு எழுதியுள்ளார்: "நாம் இந்த உடலோடு வாழும் காலம் மிகக் குறைந்த காலமே ஆகும். காலம் என்பதோ எல்லையற்று விரிந்து நிற்கும் ஒன்று. அதில் நம் ஆயுளாகிய நூறு ஆண்டுகள் எவ்வளவு சிறு பகுதி? நான் என்ற செருக்கை விட்டு, சமுதாயம் என்னும் (மக்களாகிய) கடலில் கரைந்து விடுவோமானால், அதன் பெருமையில் நாமும் கலந்து விடுகிறோம். நம்மை ஒரு பொருளாக மதித்து வாழ்வோமானால், அது கடவுளுக்கும் நமக்கும் இடையே ஒரு தடையாய் நிற்கின்றது. நம்மைப் பொருட்படுத்துவதை விடும்போது, நாம் கடவுளுடன் கலந்து நிற்கின்றோம். கடலில் கலந்த ஒரு துளித் தண்ணீருக்குக் கடலின் பெருமையும் கிட்டுகின்றது. ஆனால் தனித்து நிற்கும் நீர்த்துளி விரைவில் காய்ந்து விடுகின்றது" என்ற சொற்களில், அவர் உணர்ந்த உண்மையுணர்வு தெளிவாகின்றது. மக்கள்கடலில் ஒரு துளி என்று உணர்ந்த உணர்வில் தன்னலம் தலைகாட்டுவதற்கு இடம் ஏது? தன் வாழ்வு, ஆயுள் இவற்றைப் பொருளாக மதிக்கும்

மனம் ஏது? "கடவுளைக் காண்பதற்கு ஒரே வழி உள்ளது. அவரை அவருடைய படைப்பில் காண்பதே வழி. மக்கள் எல்லோருக்கும் சேவை செய்வதே கடவுளை அடையும் வழி. இமயமலைக் குகைகளில் கடவுளைக் கண்டு பிடிக்கலாம் என்று மனம் நம்புமானால், நான் உடனே அங்குப் புறப்படுவேன்" என்று அவர் கூறியுள்ளார். ஆகையால் அந்த வங்காளப் பகுதியில் வாழும் மக்களைக் கடவுளின் கோயில்கள் என்றும், அவர்களுக்குத் தொண்டு செய்வதே கடவுள் வழிபாடு என்றும், அதனால் வரும் இடையூறுகளுக்கு உயிரையே பலியாக வைப்பது கடமை என்றும் துணிந்த ஒருவரை உலகத்தில் தடுக்கக்கூடியவர் யார்? அச்சுறுத்தக் கூடியது எது? பொருள் வேட்கை மிகுந்தவர்கள் பழி புகழ் துன்பம் இன்பம் எதையும் பொருட்படுத்தாமல் இரவும் பகலும் அலைந்து வாழ்வையும் கெடுத்துக்கொள்வதைக் காணவில்லையா? பொருள் வேட்கையே மனத்தை இவ்வாறு தூண்டும் ஆற்றல் பெற்றிருந்தால், அறநெறியில் நின்று உண்மை உணர்ந்த ஒரு தூய வாழ்க்கையில் தொண்டு வேட்கை எவ்வளவு ஆற்றல் பெற்றதாக இருக்கும்? பொருள் மற்றென்றுக்குப் பயன்படும் கருவி. தொண்டு தானே பயனாய் நின்று வாழ்க்கையில் இன்பம் பயக்க வல்லது. ஆகையால் மக்கள் தொண்டே கடவுள் வழிபாடு என்று தெளிந்து துணிந்தவர்க்கு உள்ள அஞ்சாமை வேறு எவரிடமும் காணமுடியாது. வீடுபேறு பற்றியும் கவலை இல்லை; தொண்டே குறிக்கோள் என்று கொண்ட வாழ்க்கையில் காணும் வெற்றிக்கு நிகரான பெருமிதமும் வேறு எவரிடமும் காணமுடியாது. அண்ணலின் வாழ்க்கையில் வீரமும் அஞ்சாமையும் நிகரற்றுச் சிறந்து விளங்கியதால் தான் பகையும் குழப்பமும் கொலையும் மலிந்த கிராமங்களில் மூலை முடுக்குகளில் தனியே திரிந்து தொண்டு

ஆற்றிய புதுமை அவரிடம் காணப்பட்டது. வரலாற்றிலே பல புதுமைகள் உண்டு. ஆயினும், இந்தப் புதுமைக்கு ஈடும் இல்லை ; எடுப்பும் இல்லை.

## துணிந்த தியாகம்

ஒருவர் ஒருநாளில் ஒரு நாழிகை நேரம் தற்கொலைக்குத் துணிந்திருக்கலாம் ; ஒருநாள் முழுதும் அந்த மனநிலை நீடிக்க முடியாது ; பல நாள் நீடித்திருத்தலும் முடியாது. அதுபோலவே, ஒருவர் ஒருநாளில் ஒரு நாழிகை நேரம் உயிர்த்தியாகம் செய்யத் துணியலாம் ; திடீரென்று அந்தத் துணிவு தோன்றி அரிய பெரிய செயல்களைச் செய்யுமாறு தூண்டிவிடலாம். ஆனால் எண்ணிப் பார்க்க நேரம் இருப்பின், அந்தத் துணிவு உடனே மாறிவிடும் ; ஒரு செயலும் செய்ய முடியாத தயக்கம் அதனை அடுத்துப் பிறக்கும். ஆனால், பல நாள் எண்ணிப்பார்த்த பின், ஒரு துணிவுடன் உயிர்த்தியாகம் செய்ய முன் வருவதும், முன்வந்த படியே கொள்கையையும் நோக்கத்தையும் மாற்றாமல் பல நாள்வரையில் அந்த நெறியில் துணிவோடு தொண்டாற்றி உயிரைப் பணயமாக வைத்து நாட்களைக் கழிப்பதும் மிக மிக அரியவை ஆகும். காந்தியடிகளின் வாழ்க்கையில் காணும் உயிர்த்தியாகம் அப்படிப்பட்ட பெருஞ்சிறப்பு உடையது. பலமுறை உண்ணா நோன்பு கொண்டபோதெல்லாம் இந்த உயிர்த்தியாகம் இமயம்போல் ஓங்கி நின்றதைக் கண்டோம். ஆயினும், வங்காளக் கலகத்தில் குதித்து தனியே உலவி அந்த முதிய மெல்லிய உடலைத் தளராத தொண்டுக்குப் பயன்படுத்திய அஞ்சாமையில்தான் உலகம் அளந்து காணமுடியாத இமயத்தைக் காண்கின்றோம் ; வரலாறு கண்டறியாத பெருந் தியாகத்தைக் காண்கின்றோம்.

உணர்ச்சி வயப்பட்டபோது கோழையினிடமும் வீரம் பிறக்கும். ஆனால் உணர்ச்சி குறைந்து மறைந்தபின் அறிவோடு எண்ணும்போது வீரனிடமும் தயக்கம் தலைகாட்டும். தற்கொலை முயற்சியைப் பெரும்பாலும் கோழையினிடம் காண்கின்றோம். ஆனால் தமிழரின் உயிர்த்தியாக முறையாகிய வடக்கிருத்தலை ஒரு சில வீரரிடம் காண்பதும் அரிதாகவே உள்ளது. கோப்பெருஞ் சோழன், சேரமான் பெருஞ்சேரலாதன் போன்ற மிகச் சிலரே நாழிகை தோறும் உடல் வருந்தி வருந்தித் தேயத் தேய உண்ணா நோன்பு கிடந்து உயிரை விட முடியும். கவலை மிகுந்த ஒருவனுடைய தற்கொலைக்கும் வீரனின் வடக்கிருத்தலுக்கும் எவ்வளவு வேறுபாடு உள்ளது! திடீரென்று ஒரு புரட்சி செய்து சிறை வாயிலில் புகும் நாட்டுத்தொண்டர் ஒருவருடைய செயலுக்கும், நெடுநாள் எண்ணி எண்ணி உண்மையை நாடி அன்பைப் போற்றி இடரெல்லாம் ஏற்றுத் தொண்டு செய்த காந்தியடிகளின் தியாகச் செயலுக்கும் இடையே அவ்வளவு வேறுபாடு உள்ளது!

### தொண்டில் ஆர்வம்

காந்தியடிகளுக்குத் தொண்டிலே இருந்த ஆர்வம் அளவற்றது. ஒரு முறை இந்த நாட்டு உழவர்களின் குறைகளைப் பற்றி ஒரு கூட்டத்தில் பேசிய போது மூர்ச்சையானார்; நாக் குழறினார்; அங்கிருந்தவர் கண்ணீர்விடும் நிலைமை நேர்ந்தது. இங்கிலாந்தில் லங்கா ஷயரில் தொழுகை நடந்த கூட்டத்தில் அவர் பேசிய போது, “இந்திய ஏழைமக்களிடம் கடவுளைப் பற்றிப் பேச எனக்கு அஞ்சாமை இல்லை. அவர்களுக்குக் கஞ்சியே கடவுளாக இருக்கின்றது. அவர்களுக்கு வயிற்றுணவு தேடிக் கொடுக்காமல் கடவுளைப் பற்றி உபதேசம் செய்ய

முடியவில்லை" என்று வறுமையில் வாடும் மக்களை நினைந்து உருக்கமாகப் பேசினார். எளிய வாழ்க்கையை நினைவூட்டித் தம் செயலாளர் பியாரிலாலுக்கு ஒரு முறை அறிவுரை கூற நேர்ந்தபோது, ஒரிஸா மாகாணத்தில் கண்ட மக்களின் வறுமையையும் அவர்களுடைய எலும்புருவங்களையும் நினைந்து உருகினார். அந்த வறுமைக் காட்சி தம் நினைவை விட்டு நீங்கவில்லை என்றும், விழிப்பிலும் உறக்கத்திலும் தம்மை வருத்துவதாகவும், கடவுளின் நல்லருளில் உள்ள தம் நம்பிக்கை ஒன்றே இந்தத் துயரத்திற்கு இடையே தாம் சாகாமல் இருப்பதற்குக் காரணம் என்றும் மனம் கசிந்தார். அவ்வாறு உணர்த்தியபோது, அவருடைய குரல் கம்மியதாகவும் கண்களில் நீர் அரும்பியதாகவும் அந்தச் செயலாளர் எழுதியுள்ளார். இந்த அருளுணர்வே அவருக்குத் தொண்டு நெறியில் ஆர்வத்தைப் பெருக்கிவந்தது.

மற்றோர் உயிரின் துன்பத்தைத் தன் துன்பம் போல் உணர்வதே அறிவினால் ஆகும் பயன் என்று திருவள்ளுவர் தெளிவாக்கியுள்ளார்.

> அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
> தன்நோய்போல் போற்றாக் கடை.

இவ்வாறு பண்பட்ட சிறப்பு அடிகளிடம் இருந்த காரணத்தால், மற்றவர்களின் துன்பம் கண்டு கசிந்துருகும் நெஞ்சம் பெற்றிருந்தார். அவர்களுடைய நிலையை உயர்த்தவேண்டும், அதற்காக இடைவிடாமல் தொண்டு செய்யவேண்டும் என்ற ஆர்வமும் பெருகியிருந்தது. இதற்கு எடுத்துக் காட்டாக ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடலாம். ஒரு நாள் காலையில் காந்தியடிகளும் இன்னும் சிலரும் புத்தகங்களுக்குத் துணி உறை போடுவதைப் பற்றிப் பேசிக்கொண்

டிருந்தார்கள். உறையின்மேல் எழுத்துக்களை அமைப்பது பற்றியும் பேச்சு வளர்ந்தது. கால்மணி நேரம் கழிந்த பிறகு, அரிய காலை நேரத்தை வீணாக்கியது அடிகளுக்கு நினைவு வந்ததும் அவருடைய உள்ளம் வருந்தியது. அதைப் பற்றி அவரே எழுதும்போது, சத்தியத்தை ஆராயாமல் காலத்தை வீணாக்கியது, அஹிம்சையைப் போற்றாமல் காலத்தை வீணாக்கியது, மற்றவர்களுடைய துன்பங்களை உணர்ந்து அவற்றைத் தீர்க்கத் தொண்டு செய்வதை மறந்து காலத்தை வீணாக்கியது என்று மூவகைக் குற்றமும் உணர்ந்து வருந்தி எழுதியுள்ளார். ஒரு நாழிகையையும் வீணாக்காமல் உண்மை நோக்கத்தோடு அன்பு நெறியில் தொண்டு செய்யவேண்டும் என்று அவர் வாழ்ந்த வாழ்க்கையை இந்தச் சிறு நிகழ்ச்சியாலும் அறியலாம். ராட்டையால் நூல் நூற்கும் கொள்கை அவர் கொண்ட தொண்டு வாழ்க்கைக்கு அறிகுறியே ஆகும். இங்கிலாந்திற்குச் சென்றிருந்தபோது ஒருநாள் பல கடமைகளையும் முடிக்க நேரமாகி இரவு 2 - 30 மணிக்குத்தான் திரும்பி வந்தாராம். அவ்வளவு நேரமாகியிருந்தும், அவர் வந்தவுடன் படுக்கைக்குச் செல்லவில்லை. வழக்கம்போல் அரை மணிநேரம் உட்கார்ந்து அன்று நூற்கவேண்டிய அளவு நூலையும் நூற்று முடித்துத்தான் படுத்தார். ஆயினும் வழக்கம்போல் வைகறை 4 மணிக்குத் துயில் எழுந்தார். வாழ்க்கையில் உணவு உண்பதை மறக்காமல் போற்றிக் கொண்டு இருப்பதுபோல், உழைப்பதையும் மறக்காமல் போற்ற வேண்டும் என்பது அவர் கருத்து. தொண்டு நெறியில் உழைக்கவேண்டும் என்று அவர் கொண்டிருந்த உறுதிக்கு மற்றொரு சான்றும் இருக்கின்றது. தம் முடிவைப் பற்றி குறிப்பிட நேர்ந்தபோது ஒரு முறை "ராட்டினத்தைச் சுழற்றிக்கொண்டே நான் சாக வேண்டும் என்று விழைகின்றேன். கடவுளை அடைய

அப்படிப்பட்ட தொண்டே வழி" என்று கூறினர். அவர் தம் ஆசிரமத்தார்க்கு எழுதிய கடிதத்தில் நூல் நூற்றல் அன்றாட வேள்வி என்று குறிப்பிட்டு, "பிற ருடைய நன்மையைக் கருதிக் கைம்மாறு எதிர்பாராமல் செய்யப்படும் தொண்டே வேள்வி (யக்ஞம்)" என்று எழுதியுள்ளார்.

பகவத் கீதைக்கு அவர் எழுதிய விளக்கம் அனுசக்தி யோகம் (பற்றின்றி வாழ்தல்) என்னும் பெயருடைய நூலாகும். அந்த நூலில் யக்ஞம் (வேள்வி) என்னும் சொல்லை விளக்கும்போது, "யக்ஞம் என்பது பிறர்க்கு உதவியாகவும் கடவுளுக்காகவும் செய்யப்படும் தொண்டு" என்று குறிப்பிட்டு, கடவுளின் படைப்பாக உள்ள உயிர் களுக்குத் தொண்டு செய்வதே கடவுள் தொண்டு என்றும், அதுவே வேள்வி என்றும் எழுதியிருக்கின்றார். அவர் பேசிய தொழுகைப் பேச்சுக்களுள் டில்லியில் இறுதியாகப் பேசிய (1948 ஜனவரி 29) பேச்சிலும், இதை விளக்க மாகக் கூறினர்: 'உண்டும் குடித்தும் களித்தும் வாழ்வ தற்காகக் கடவுள் மக்களைப் படைக்கவில்லை. ஒவ்வொரு வரும் யக்ஞம் செய்ய வேண்டும் என்றும், அந்த உழைப் பால் வரும் பயனையே உண்ணவேண்டும் என்றும் கீதை கற்பிக்கின்றது உழைக்காமல் உண்கின்ற பெருஞ் செல்வர்கள் அட்டைகளே. அவர்களும் வியர்வை சிந்தி உழைத்தே உண்ணவேண்டும்; இல்லையேல் உணவு பெறு வதற்கு உரிமை இல்லை. உழைக்கும் வலிமை இல்லாதவர் களுக்கு மட்டுமே சமூகத்தில் விதிவிலக்கு இருக்க முடியும்" என்று கூறினர். இந்த உடம்பு இருக்கும் வரையில் மற்றவர்களுக்காகத் தொண்டு செய்ய வேண்டும் என்பதும், சோற்றுக் கவலையை மறந்து தொண்டைத் தேடி அலைய வேண்டும் என்பதும், உண்பதும் பருகுவதும் உறங்குவதும் விழிப்பதும் ஆகிய எல்லாம் பிறர்க்குத்

தொண்டு செய்யவே என்பதும், இத்தகைய வாழ்க்கையே இன்ப வாழ்க்கை என்பதும் அவருடைய கொள்கைகளாகும்.

## பிறர் உரிமை

நம் வாழ்க்கையைப் பற்றி எண்ணும் போதெல்லாம் பிறர் வாழ்க்கைக்கு இடையூறு இல்லாத வகையிலேயே எண்ணவேண்டும். நம் வாழ்க்கையை நடத்தும்போது பிறர் நன்மையைக் கருத்தில் கொண்டே நடத்தவேண்டும். உலகப் பெரியோர்களின் தனிவாழ்க்கை, சமுதாய வாழ்க்கை இரண்டிலும் இந்த உண்மையைக் காணலாம். இந்தக் கொள்கையைப் பெரிய பெரிய துறைகளில் மட்டும் கைக்கொண்டு, சிறு சிறு கடமைகளில் நெகிழ்ந்திருப்பதும் கூடாது. சிறு தவறே பெருந் துன்பங்களுக்குக் காரணமாவது கண்கூடு. இந்தியர்களின் அரசியல் உரிமைக்காக வாழ்க்கையைத் தியாகம் செய்த காந்தியடிகள், மாபெருங் கூட்டங்களிலும் சிறு சிறு கடமைகளை வற்புறுத்தாமல் விடுவதில்லை. எழுதும்போதும் அவ்வாறே வற்புறுத்திவந்தார். தெருவில் வாழைப் பழத் தோலைப் போடும் பொறுப்பற்ற செயலையும் கடிந்து திருத்துவார்; கண்ட இடமெல்லாம் எச்சில் துப்பித் தூய்மையைக் கெடுக்கும் அநாகரிகப் பழக்கத்தையும் கடிந்து திருத்துவார்; காசி நகரத்து இந்து பல்கலைக் கழகத் திறப்பு விழாவில் 1916-ம் ஆம் ஆண்டில அன்னி பெசன்ட் அம்மையாரின் தலைமையில் பேசியபோது, பம்பாய் நகரத் தெருக்களில் மேல்மாடிகளில் வாழ்கின்றவர்கள் அங்கிருந்தபடியே கீழே துப்பும் கொடிய வழக்கத்தையும், தெருக்களில் நடந்துபோகின்றவர்கள் எந்த நேரமும் மேலேயிருந்து விழும் எச்சிலை எதிர்பார்த்து ஒதுங்கும் துன்பத்தையும் எடுத்துக் கூறிக் கடிந்தார். ரயில் பயணங்களில்

மூன்றும் வகுப்புப் பெட்டிகளில் எங்கும் எச்சில் துப்பிக் கெடுக்கும் பழக்கத்தையும் கடிந்தார். இவ்வாறு அவர் திருத்தும் போதெல்லாம், எல்லோரும் இனிது வாழவேண்டும் என்ற உயர்ந்த குறிக்கோளையும் பிறர்க்கு இடையூறு இல்லாத வகையில் வாழ்க்கையை நடத்த வேண்டும் என்ற சிறந்த கொள்கையையும் காணலாம். இதுவே எல்லாருக்கும் ஒத்த உரிமை நல்கும் பெருந்தன்மை; உரிமை வாழ்க்கைக்கு அடிப்படையான சிறந்த பண்பு.

மற்றவர்களின் உரிமைக்கு இடர் விளைக்கின்றவன் உரிமையுணர்வே இல்லாதவன். உரிமை என்பது கொடுக்கும் அளவே கொள்ளப்படுகின்ற பொருள். பிறர்க்கு உரிமை கொடுக்காமல் தான்மட்டும் உரிமையோடு வாழ முயல்கின்றவன் உரிமையாளன் அல்ல; கொடுங்கோலன் என்பதே அவனுக்குப் பொருந்தும் பெயர். சமய உணர்வு நிறைந்து தொண்டே வாழ்வாகக் கொண்டிருந்த காந்தியடிகள் ஒவ்வொரு துறையிலும் இந்த உரிமையுணர்வைப் போற்றி வாழ்ந்தார். அதனால்தான், எந்தக் கோயிலில் தாழ்த்தப்பட்டோருக்கு இடம் இல்லையோ அந்தக் கோயிலில் தாம் நுழைவதில்லை என்ற நோன்பு கொண்டார். தாம் பெறும் உரிமை மற்றவர்களுக்கும் இருக்கவேண்டும் என்ற பொதுநல உணர்வு மிகுந்தவர் ஆகையால், எல்லா மக்களுக்கும் ஒத்த உரிமை இருக்கும் கோயிலுக்குள் மட்டும் நுழைந்து வழிபாடு செய்தார். 1936 - ஆம் ஆண்டில் பெங்களூரிலிருந்தபோது, இதையே மற்றவர்களுக்கு வழியாக வற்புறுத்திக் கூறினர். "ஹரிஜனங்களை நுழைய விடாத கோயிலைப் பாம்பு இருக்கும் இடத்தைப் போல் கருதிப் புறக்கணிக்க வேண்டும். இந்துக் கோயில்களில் கடவுள் இல்லை என்று நான் சொல்வது இதனால்தான்" என்றார். மக்களில் ஒரு பகுதியாரின் உழைப்பை மட்டும் பெற்றுக்கொண்டு அவர்களுடைய உரிமையைப் பறித்துக்

கொண்டு, தாழ்த்தப்பட்டவர்கள் என்றும் தீண்டத் தகாதவர்கள் என்றும் ஒதுக்கும் கொடுமையை அவரால் பொறுக்க முடியவில்லை. 1932 - ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் எரவாடா சிறையில் உண்ணு நோன்பு கிடந்து வெளியிட்ட அறிக்கை ஒன்றில் இதைத் தம் உயிரின் வேதனை என்று குறிப்பிட்டு, தம்மோடு சேர்ந்து இந்த வேதனையை எல்லோரும் பங்கிட்டுக்கொள்ள வேண்டும் என்றும், ஒத்துழைக்க வேண்டும் என்றும் மன்ருடினுர்.

## பிறர் துன்பம் உணர்தல்

கோயிலிலே புறக்கணிக்கப்படுகின்ற மக்களைப் பற்றி அவர் கொண்டிருந்த கவலை அளவற்றது. அதே மக்கள் சமுதாயத்திலே சாதி முதலிய காரணங்களால் புறக்கணிக்கப்படும் நிலைமையும் பெருங் கொடுமையாகவே அவருக்குத் துன்பம் தந்தது. அதனுல்தான் தீண்டாமையை ஒழிக்கப் பலவகை முயற்சிகளை மேற்கொண்டார்; உண்ணு நோன்பும் கொண்டார்.

ரயில் பயணத்தில் மூன்ரும் வகுப்பில் செல்லும் மக்களே பெரும்பாலோராக இருந்தும், அவர்களிடமிருந்து பெறுகின்ற பணமே பெரிய வருவாயாக இருந்தும், அவர்கள் எவ்வளவோ புறக்கணிக்கப்படுகின்ருர்கள் என்பதை உணர்ந்த காந்தியடிகள் 1917 - ஆம் ஆண்டில் செய்தித்தாள்களுக்கு ஒரு நீண்ட அறிக்கை அனுப்பினுர்; செல்வமும் செல்வாக்கும் உள்ள இந்தியர்கள் முதல் வகுப்பிலும் இரண்டாம் வகுப்பிலும் பயணம் செய்யும்போது, மற்றவர்களுக்குக் கிடைக்காத நன்மைகளை எல்லாம் பெற்று, மூன்ரும் வகுப்பில் செல்லும் மக்களைப் புறக்கணிப்பதைக் கடிந்தார்; அவர்கள் இந்த நிலையை மாற்ற வேண்டும் என்றும், அதற்காக அடிக்கடி மூன்ரும் வகுப்பில் பயணம் செய்ய வேண்டும் என்றும் அறிவுறுத்தினுர். எந்தத்

துறையிலும் மற்றவர்களுக்குச் சொல்லுமுன் தாமே செய்து காட்டும் பண்பு உடையவர் ஆகையால், அன்று முதல் முதல்வகுப்பிலும் இரண்டாம் வகுப்பிலும் பயணம் செய்வதை நிறுத்தினர். இந்தியா என்னும் இந்தப் பரந்த பெரிய துணைக்கண்டத்தின் மூலை முடுக்குகளை எல்லாம் அவரைப் போல் பலமுறை சுற்றிப் பார்த்தவர்கள் ஒருவரும் இதுவரையில் இல்லை. இவ்வளவு மிகுதியாகப் பயணம் செய்த அவர் மூன்றும் வகுப்பிலேயே சென்று சுற்றியிருக்கின்றார் என்பதை நினைக்கும்போது, ஒத்த உரிமையை நிலைநாட்டுவதில் அவர் கொண்டிருந்த நோன்பின் பெருமை விளங்குகின்றது. இந்தத் துறையில் படித்த செல்வர்கள் தம் கடமையை உணர்ந்து நடக்க வேண்டும் என்றும், ஏழைகளுக்கு மறுக்கப்படும் எந்த நன்மையையும் ஒருவர் பெறக்கூடாது என்றும் வற்புறுத்தியிருக்கின்றார்.

அண்டை அயலாருக்கு இல்லாத இன்பங்களை நுகர்வது பாவம் என்று நீதிதர்மத்தில் அவர் எழுதியிருக்கின்றார். இந்த உணர்வுதான் அவர் வாழ்க்கையை மிகமிக எளிய நிலைமைக்குக் கொண்டுபோய்விட்டது. தமிழ் நாட்டில் மானத்தை மறைக்கப் போதுமான கந்தலும் இல்லாமல் குடியானவர்கள் வாழ்வதைக் கண்டு கசிந்து உருகிய போதுதான், அவர் அணிந்திருந்த நீண்ட அங்கி தலைப்பாகை முதலியவைகள் அகன்றன. முழங்கால்வரையில் அணிந்த வறுமைக் கோலம் அன்று முதல்தான் அவருடைய தவக் கோலமாக விளங்கத் தொடங்கியது.

## ஆடம்பரத்தில் வெறுப்பு

ஆடம்பர வாழ்க்கை அவருக்கு எப்போதும் வெறுப்பே விளைத்துவந்திருக்கின்றது. காசி இந்து பல்கலைக் கழகத்தின் தொடக்க விழாவில் சொற்பொழிவாளர் எல்லோரும் இந்தியாவின் வறுமையைப் போக்க வேண்டும் என்று

பேசினார்கள். ஆனால், வைசிராய் வந்திருந்தபோது சுற்றிலும் இருந்தவர்களின் ஆடம்பரத் தோற்றமோ அதற்கு நேர்மாறாக இருந்தது. பொன்னும் மணியுமாக அங்கே பெருஞ் செல்வர்கள் ஒளியுமிழ்ந்து விளங்கினார்கள். கண் காட்சிக்கு உரிய விருந்தாக அந்தக் கூட்டம் தோன்றியது. அண்ணல் பேசும் வாய்ப்பு வந்தபோது, அவர் இந்த முரண்பாட்டைத்தான் சுட்டிக்காட்டினார். அது வேறு, இது வேறு, அவர்கள் நல்வினையால் பெற்றது அது, இவர்கள் தீவினையால் உற்றது இது என்று கழித்துவிடக் காந்தியடிகளால் முடியவில்லை. " இந்த அணிகலன்களை எல்லாம் உங்கள் உடம்பிலிருந்து கழற்றிச் சேர்த்து மக்களின் பொதுச் செல்வம் என்று உணர்ந்து ஒதுக்கினால் அல்லாமல் இந்தியா முன்னேற வழி இல்லை" என்று வெளிப்படையாகக் கூறினார். பிறகு, போகும் கூட்டங்களில் எல்லாம் நகை அணிந்த மாதர்களை நோக்கி நாட்டுத் தொண்டுக்கு நன்கொடையாகக் கழற்றித் தருமாறு கேட்டார். அவரைப் பார்க்கச் செல்லும் செல்வக் குடும்பத்துப் பெண்களும் வீட்டிலேயே நகைகளைக் கழற்றிப் பெட்டியில் வைத்துப் பூட்டி எளிய கோலத்தோடு செல்லத் தொடங்கினார்கள். நாட்டில் சொல்வன எல்லாவற்றையும் வீட்டில் செய்துகாட்டும் அவர், தம் அருமைத் துணைவியாரான கஸ்தூரிபாயின் வாழ்க்கையில் நகைப் பித்தை அடியோடு போக்கி விட்டார். தென் ஆப்பிரிக்காவிலிருந்து இந்தியாவிற்குத் திரும்பிய போது அங்கிருந்த இந்தியர்கள் பலவகை உயர்ந்த பரிசுகளை வழங்கினார்கள். கஸ்தூரிபாய்க்கு என்றே ஒருவர் 52 பவுன் கொண்ட தங்கச் சரம் ஒன்றைக் கொடுத்தார். வைர மோதிரங்கள் முதலிய அணிகலன்களும் இருந்தன. நகைப் பித்தை ஒழிக்க முயன்றுவந்த அவரிடத்தில் இப்படி நகைகள் வலியத் தேடிவந்து குவிந்தும், அவர்

இவற்றைத் தம் செல்வம் என்று கொள்ளாமல், பொதுத் தொண்டுக்குப் பரிசாக வந்த பொதுச் செல்வம் என்றே மதித்தார். சொந்தத்துக்குப் பயன்படுத்தக் கூடாது என்று கஸ்தூரிபாய்க்குக் கூறினார். "நான் நகை அணிந்து கொள்ளக் கூடாது என்று சொல்லுங்கள். உங்களுக்கு அந்த உரிமை உண்டு. ஆனால், எனக்கு வரும் மருமக்களுக்கு நகை வேண்டாமா? எதிர்காலத்தில் நம் நிலைமை எப்படி இருக்குமோ! ஆகையால், திருப்பிக் கொடுக்கமாட்டேன்" என்று கஸ்தூரிபாய் மறுத்தார்; மன்றாடினார்; கண்ணீரும் சொரிந்தார். "என் தொண்டுக்காகக் கொடுக்கப்பட்டதல்லவா?" என்றார் காந்தி. "உங்கள் தொண்டுக்காகத்தான். ஆனால், அதற்காக நான் துணையாக இருந்து உழைக்கவில்லையா? போவார் வருவார் எல்லாரையும் நீங்கள் வீட்டுக்கு அழைத்து வரவில்லையா? அவர்களுக்காக நான் அடிமை போல் உழைக்கவில்லையா?" என்றார் கஸ்தூரிபாய். அண்ணலின் மனமும் மெல்ல மாறியதாம். ஆனால், அதற்குள் கஸ்தூரிபாய் விரைந்து மனம் மாறி உடன்பட்டாராம். பரிசுப் பொருள்கள் திருப்பிக் கொடுக்கப்பட்டுப் பொது நிதியாகப் பயன்பட்டன. நகைப்பித்தும் குடும்பத்தை விட்டு அகன்றது. கஸ்தூரிபாய் பெண்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக, தூய இலக்கியமாகத் திகழ்ந்தார்.

ஆடம்பரத்தில் வேட்கை உள்ளவனோ, அல்லது உலகம் மதிக்கவேண்டும் என்று ஆசை கொண்டவனோ உண்மையாக அறநெறியில் நடக்க முடியாது என்று அவர் நீதிதர்மத்தில் எழுதியுள்ளார். அவ்வாறே அவர் வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலும் ஆடம்பரமின்றி வாழ்ந்ததைக் காணலாம். தம் மக்களுக்குத் திருமணம் நடத்திய காலத்திலும், மிகச் சிலரை மட்டும் வரவழைத்து மிக எளிய முறையில் சுருங்கிய சடங்குகளோடு

திருமணத்தை நடத்தி ஒப்பற்ற வழிகாட்டியாக விளங்கினர்.

திருடாமை

அறம என்பது இயற்கைச் சட்டம் என்றும், எல்லோருடைய வாழ்க்கைக்கும் பொதுவான அடிப்படை அதுவே என்றும் காந்தியடிகள் உணர்ந்து தெளிந்தார். அறநெறி அல்லது சன்மார்க்கத்தை அடிப்படையாகக் கொண்டே குடியாட்சி அமையவேண்டும் என்றும், இல்லையானல் அது தடியாட்சியைவிடக் கொடுமையானது என்றும் அவர் கருதினர். மக்கள் கூடி வாழும் வாழ்க்கையில் தன்னலமற்றவர்களாக இருந்தால்தான் அமைதியும் இன்பமும் வாழ்க்கையில் விளங்கும் என்பது அவர் கருத்து. அதனுல்தான் பிறருக்கு ஊழியம் செய்யவேண்டிய கடமையை எல்லோரும் உணரவேண்டும் என்றும், அவ்வாறு உணர்ந்துவிட்டால் பணம் குவிப்பது பெரிய பாவம் என்ற உண்மை தானுக விளங்கிவிடும் என்றும் எழுதியுள்ளார். "அப்போது பணக்காரன் ஏழை என்ற வேற்றுமை இருக்காது ; பஞ்சம் இருக்காது ; பட்டினி இருக்காது ; உலகத்தில் நல்ல பண்பு அரிதாகி விட்டது என்றும், தாம் சிறுபான்மையோர் என்றும் சொல்லி அறவோர் ஒதுங்கி நிற்கமாட்டார்கள்" என்று எழுதியுள்ளார். ஆகவே, நல்ல ஆட்சிமுறை அமைந்த வாழ்க்கைக்குத் தன்னலம் போகவேண்டும் என்றும், பணத்தால் வரும் வேற்றுமை தொலையவேண்டும் என்றும், எல்லோரும் வாழ எல்லோரும் பாடுபட வேண்டும் என்றும் அவர் அறிவுறுத்தினர். உத்தம வாழ்க்கை என்ற நூலில் திருடாமை, எளிய வாழ்க்கை என்ற இரு தலைப்பிலும் இதை வற்புறுத்தியுள்ளார்.

தேவைக்குமேல் மிகுதியாகப் பொருள்பெற்றுக் கொள்வது திருடு என்றே குறித்திருக்கின்றார். தேவைகளைப் பெருக்கிக்கொள்வது மாயை என்றும், திருட்டுப் பயிற்சி என்றும் கடிந்திருக்கின்றார். இந்த நெறி தவறி நடப்பவர்களால் தான் உலகத்தில் வறுமைத் துன்பம் பெருகுகின்றது; செலவர்களிடம் பொருள் குவிந்து கிடக்கும்போதே ஏழைகள் பட்டினியால் சாகின்றார்கள்; பிறருக்குச் சேவை செய்யும் ஆசை பெருகுவதே நாகரிகம்; தேவை பெருகுவது நாகரிகம் அல்ல ; தேவைக்கு மேற்பட்ட பொருள்களைச் சேர்த்து வைத்துக்கொண்டிருப்பவர்களே மற்றவர்கள் திருடும்படியாகத் தூண்டுகின்ற குற்றவாளிகள்; நாளைக்கு என்றும் எதிர்காலத்துக்கு என்றும் சேர்த்து வைக்காதவர்களே கடவுளின் அன்பர்கள் ; நம் சொத்து என்று இருப்பதை நமது என்று உணராமல், பொதுமக்களின் நன்மைக்காக நம்மிடம் இருப்பது என்று உணரவேண்டும் ; அதை நாள்தோறும் ஆராய்ந்து குறைத்துக்கொண்டு வாழ வேண்டும் என்று இவ்வாறெல்லாம் தம் உள்ளம் உணர்ந்த உண்மையை விளக்கியுள்ளார்.

1916 - ஆம் ஆண்டில் சென்னையில் சத்தியாக்கிரக ஆசிரம விதிகளைப் பற்றிப்பேசியபோது, “நாமெல்லோரும் ஒருவகையில் திருடர்களே ; எனக்கு இந்த வேளைக்குத் தேவை அல்லாத பொருளை என்னிடம் சேர்த்துவைத்திருப்பேனுனல், நான் அந்தப் பொருள் பயன்படவேண்டிய ஒருவருக்குப் பயன்படாமல் தடுத்துத் திருடிவைத்திருக்கிறேன் என்றுதான் கொள்ளவேண்டும்'' என்று எடுத்துரைத்தார். ஆனால், தாம் பொதுவுடைமைக் கொள்கையினர் அல்ல என்றும், செல்வரிடமிருந்து செல்வத்தைப் பறித்தலைப் போற்றவில்லை என்றும், வற்புறுத்தல் இல்லாத அன்பு முறையால் பொருள் வேறுபாடு தொலையவேண்டும் என்றும் விளக்கினர். தாம் தமக்கு

என்று தேவைக்குமேல் வைத்திருக்கவில்லை என்று 1916 - ஆம் ஆண்டிலேயே தெரிவித்தார். வியாபாரிகளை நோக்கிப் பேசியபோது, அவர்கள் பணத்தைக் குவிப்பதால், பணபலத்தால் படை திரட்டப்படுகின்றது என்றும், அதனால் போர் மூளுகின்றது என்றும், ஆகையால் வியாபாரமே போருக்குக் காரணம் என்றும், வியாபாரிகளின் கையிலேயே போரின் திறவுகோல் இருக்கின்றது என்றும் கூறினார். தகாத வழியில் பணம் சம்பாதிக்கும் வியாபாரி வக்கீல் வைத்தியர் முதலியவர்களை விட எழுதப்படிக்கத் தெரியாத கூலியாள் சிறந்தவன் என்று அவர் எழுதியிருக்கின்றார்.

உழைக்கின்ற மக்கள் வாழ்க்கையில் வாடுவதும், அவர்கள் இருக்கும் கிராமங்கள் சீரழிவதும் காந்தியடிகளின் சிந்தையைக் கலக்கின. தேவைக்குமேல் சேர்த்து வைக்காதே என்று உலகிற்கு அறிவுறுத்தத் தொடங்கியவர், உழைக்கின்றவனுடைய வயிறு ஒட்டி வாடுவதைக் கண்டு உருகாமல் இருக்க முடியுமோ? அதனால் உழவர்களைப் பற்றிப் பேசும்போதெல்லாம உருகினார். அவர் இறுதியாகப் பேசிய தொழுகைப் பேச்சிலும் உழவர்களின் நிலையை உயர்த்தப் பாடுபட வேண்டும் என்றார்; " இந்த நாட்டு உழவர்களின் நிலை சீர்ப்பட வேண்டும். என் உள்ளம் விரும்புவதைச் சொல்கின்றேன். இந்த நாட்டின் கவர்னர்ஜெனரலாகவும் முதலமைச்சராகவும் வருகின்றவர்கள் உழவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இந்த மண்ணுலகத்தை ஆளும் உரிமையுடையவர்கள் உழவர்களே என்று இளமையில் பாடபுத்தகங்களில் படித்திருக்கிறேன். நிலத்தில் உழுது பாடுபட்டுத் தம் உழைப்பால் விளைந்ததை உண்கின்ற மக்களுக்கே இது பொருந்தும். இப்படிப்பட்ட உழவர்கள் கல்லாதவர்களாக இருக்கலாம்; ஆனால் பெரிய பதவிகளை ஏற்று நடத்துவ

தற்கு வேண்டிய திட்பமான பொதுஅறிவும் அஞ்சாத பெருந்தகைமையும் பிறழாத சான்றாண்மையும் ஐயத்திற்கு இடமில்லாத நாட்டுப்பற்றும் இருந்தால் போதும். நாட்டின் செல்வத்தை உண்மையாக உழைத்து உண்டாக்குகின்றவர்கள் உழவர்களே ஆகையால், ஆளும் பொறுப்பும் அவர்களுக்கே உரியது. ஆனால் நாம் அவர்களை அடிமைப்படுத்திவிட்டிருக்கிறோம்'' என்று தெளிவாக அறிவித்தார். மறுநாள் இறுதி எழுத்தாக எழுதி வைத்துள்ள கட்டுரையிலும், “இந்திய முன்னேற்றம் என்றால் கிராமங்களின் முன்னேற்றமே'' என்று உழைப்பாளிகளை உயர்த்தும் கருத்தைப் புலப்படுத்தியிருக்கின்றார்.

3

# முற்போக்கு

## சீர்திருத்தம்

நோக்கம் உள்ள இடத்தில் அறிவு உண்டாகும்; சீர்திருத்தம் உள்ள இடத்தில் ஆக்கம் உண்டாகும். இது எல்லாத் துறைகளுக்கும் பொருத்தமான உண்மை ஆகும். காந்தியடிகள், மக்கள்வாழ்க்கையில் ஆக்கம் பெருக வேண்டும் என்று ஓயாமல் பாடுபட்டவர்: ஆகையால் குடும்பம், சமயம், அரசியல், சமுதாயம் முதலான எல்லாத் துறைகளிலும் அவர் இணையற்ற சீர்திருத்தக் காரராக விளங்கினார். ஆயினும், அவருடைய சீர்திருத் தத்தில் கடுமைக்கு இடம் இல்லை; இனிமைக்கே இடம் உண்டு; வெறுப்புக்கும் அழிவுக்கும் இடம் இல்லை; அன்புக்கும் ஆக்கத்திற்குமே இடம் உண்டு; ஆரவாரம் இருக்காது; அமைதியே இருக்கும். தீமையை அழித்தால் தான் நன்மையை வளர்க்கமுடியும் என்று நம்பித் தீமையை அழிப்பதே கடமையாக அவர் மாறுவதில்லை; தொடக்கத்திலிருந்து நன்மையைப் பெருக்குவதே நாட்ட மாய் நின்று தொண்டு செய்வதே அவர் பண்பு; நன்மை பெருகினால் தீமை தானே குன்றிவிடும் என்பதே அவர் நம்பிக்கை. அதனால்தான் மூட நம்பிக்கைகளை எடுத்துக் கடிந்து பேசுவது குறைவாகவும், நல்ல உண்மைகளைப் போற்றுவது மிகுதியாகவும் காணப்பட்டன. அவர் மற்றவர்களைக் குறைகூறுவதும் குறைவே; மற்றவர் களின் நெறியைப் பழிப்பதும் குறைவே; ஆனால் நல்வழி

களை ஓயாமல் எடுத்துச்சொல்லி நற்செயல்களை இடைவிடாமல் செய்துகொண்டிருந்தார். அதனால்தான் மற்றவர்கள் பேசியதில் நூற்றில் ஒருபங்கு சீர்திருத்தமும் அவர் பேசவில்லை என்று தோன்றினாலும், இந்த நாட்டில் இது வரையில் யாரும் செய்யமுடியாத அவ்வளவு சீர்திருத்தங்களையும் தனி ஒருவராய் நின்று வெற்றி பெறச் செய்து முடித்த பெருமை அவருக்கு உரியதாயிற்று. பொதுவாக, சமயப்பற்று ஓரளவு உடையவர்களும் தொடக்கத்திலிருந்தே பன்னிப் பன்னிப் பேசும் பொருள்கள் மூன்று: முன்பிறவி பின்பிறவி பற்றியது, ஊழ்வினைப்படி தான் எல்லாம் நடக்கும் என்பது, அருள்நிலை பெற்றவர்கள் செய்யும் அற்புதச் செயல்கள். காந்தியடிகள் இந்த மூன்றைப் பற்றியும் பேசியது மிக மிகக் குறைவே. இந்த ஒரு துறையிலிருந்தே, அவர் பேசாமல் அமைதியாகச் சீர்திருத்தம் செய்வதில் எவ்வளவு ஆற்றல் பெற்றிருந்தார் என்பதை உணரலாம்.

சீர்திருத்தம் செய்வதில் இவருடைய போக்கும் தனிச்சிறப்பு உடையது. தாம் செய்ய விரும்பும் சீர்திருத்தம் எல்லோருடைய வாழ்க்கைக்கும் பொதுவாக நன்மை செய்யவேண்டும் என்று எண்ணிப் பார்த்தே வாழ்க்கையில் மேற்கொண்டார். தாம் மட்டும் நன்மை பெற்று இனிது வாழும் சீர்திருத்தத்தை அவர் கொள்ளவில்லை. தம்மைச் சுற்றி வாழ்வோரைக் கைதூக்கிவிடும் சீர்திருத்தத்தையே அவர் போற்றினார். எடுத்துக்காட்டாக, மூன்றும் வகுப்பில் ரயில் பயணம் செய்யும் ஏழைமக்கள் எத்தனை இன்னலுக்கு ஆளாகின்றார்கள் என்று எண்ணி வருந்திய அவருடைய நெஞ்சம் முதல் வகுப்பிலும் இரண்டாம் வகுப்பிலும் பயணம் செய்வதை விட்டு மூன்றும் வகுப்பையே நாடியது. மூன்றும் வகுப்பைத் திருத்த முயன்றார்; வெற்றி பெறுகின்ற வரையில், அவர்களைப்

போலவே மூன்றும் வகுப்பில் பயணம் செய்து அந்தக் குறைகளை ஏற்றார். நாட்டின் நன்மைக்காக வியர்வை சிந்தும் ஏழைக் குடியானவர்களை உயர்த்த முயன்றார்; அவர்கள் போதிய ஆடையும் இல்லாமல் வருந்துவதை உணர்ந்து, தாமும் அவர்களைப் போலவே எளிய ஆடைகளைக் கொண்டு வாழ்க்கை நடத்தலானார். குடிசைகளில் வாழும் வாழ்க்கையை வளம்படுத்த வேண்டும் என்று எண்ணியதும் அவரும் குடிசை வாழ்க்கை வாழ்ந்து அவர்களுக்காகத் தொண்டு ஆற்றத் தொடங்கினார். அவர் மேல்மாடியில் நின்றுகொண்டு மற்றவர்களை நோக்கிக் கையசைத்து அழைக்கவில்லை; மாடியை விட்டுக் கீழே இறங்கிவந்து மற்றவர்களோடு கலந்து கைகோத்து அழைத்துச் செல்ல முயன்ற சீர்திருத்தமே அவருடைய சீர்திருத்தமாகும். ஆகவே சீர்திருத்தம் செய்வதிலும் பொதுநலம் நாடும் தொண்டுதான் அடிப்படையாக விளங்கியது.

இந்து மதத்தினரிடையே பல மூட நம்பிக்கைகள் இருப்பது அவருக்கு நன்றாகப் புலப்பட்டுவந்தது. புதிய முறையில் ஒரு கோயில் கட்டவேண்டும் என்றும் அந்தக் கோயிலைக் காந்தியடிகளின் பெயரால் நிறுவ வேண்டும் என்றும் ஒருவர் ஆர்வத்தோடு முயன்று அவரிடம் தெரிவித்தபோது, கொல்லென்று சிரித்தார்; உடனே ஆழ்ந்த கருத்தினராய் அவரைப் பார்த்து, "உங்கள் முயற்சி நல்லதுதான். நல்ல எண்ணத்தோடுதான் இதைச் செய்ய விரும்புகின்றீர்கள். நம் சமூகத்திலும் சமயத்திலும் பலவகை மூட நம்பிக்கைகள் புகுந்து அவற்றை மாசுபடுத்திக்கொண்டிருக்கின்றன. என் வாழ்நாள் முழுவதும் அவற்றை எதிர்த்துவந்திருக்கின்றேன். இது உங்களுக்குத் தெரியும். நீங்கள் செய்யும் முயற்சி நாளடைவில் மெல்லப் புதிய புதிய மூடநம்பிக்கைகளைச்

சேர்த்துவிடும். பிறகு, அவற்றை எதிர்த்துப் போராட உங்களுக்கே ஆற்றல் இல்லாமல் போய்விடும். இன்மைக்குப் பலவகைச் சாதியாருக்கும் வகுப்பாருக்கும் இடையே உள்ள வேற்றுமைகளைக் குறைத்து ஒற்றுமையை வளர்ப்பது போய், உங்களை அறியாமல் நீங்கள் என் பெயரால் புதிய பிரிவை ஏற்படுத்திவிடுவீர்கள். ஆகையால் அந்த முயற்சி வேண்டாம். உங்கள் ஆசிரமத்தில் ஒன்று வேண்டுமானால் செய்யுங்கள். தொழுகைக்காக வெட்ட வெளியான இடம் ஒன்றை ஒதுக்குங்கள். அதைச் சுற்றிலும் மலர் நிறைந்த மரங்களை வளர்த்து அழகுபடுத்துங்கள். பூக்கள் உதிர்தலும் புது மணம் கமழ்தலும் வழிபாட்டுக்கு உரிய வகையில் ஒரு தனிச் சூழ்நிலையை அந்த இடத்தில் ஏற்படுத்தும்'' என்றார்.

வருணாசிரமமுறையில் அவர் நம்பிக்கை கொண்டிருந்தார். ஆனால் இன்றுள்ள சமூகத்தில் பழைய வருணாசிரம அமைப்பு இல்லை என்றும், இன்றைய அமைப்பு நல்லது அல்ல என்றும் கருதினார். தோட்டி வேலைக்கும் வேதம் ஓதும் தொழிலுக்கும் உயர்வு தாழ்வு கற்பிக்கக் கூடாது என்றும், இரண்டும் ஒத்த மதிப்பு உடையவைகளே என்றும் வற்புறுத்தினார். எவர் மிகக் குறைந்த கைம்மாறு எதிர்பார்க்கின்றாரோ, எவரால் சமூகத்திற்கு நன்மை மிகுதியோ அவரே சிறப்புக்கு உரியவர் என்றார். 1930-ஆம் ஆண்டில் எரவாடா சிறையிலிருந்து எழுதிய ஒரு கடிதத்தில், "சமுதாயத்தில் தோட்டி வேலை செய்வதற்கு என்று தனியாக ஒரு வகுப்பை ஒதுக்கி வைத்திருப்பது பெரிய தவறு. பல ஆண்டுகளாக எனக்கு இந்தக் கருத்து இருந்துவருகின்றது. அந்தத் தொழில் உயிர்வாழ்க்கைக்குக் கட்டாயமாக வேண்டிய ஒரு தொழிலாகும். இதைத் தாழ்ந்த தொழில் என்று முதலில் சொன்னவர் யார் என்பதற்கு வரலாற்றில்

சான்று ஒன்றும் கிடைக்கவில்லை. அவர் யாராக இருந்தாலும், அவர் செய்தது கொஞ்சமும் நன்மை அல்ல. நம்முடைய குழந்தைப் பருவத்திலிருந்தே நாம் எல்லோரும் தோட்டிகளே என்று உறுதியாக எண்ணி நம் மனத்தை மாற்றிக்கொள்ள வேண்டும்" என்று எழுதினார்.

தீண்டாமை என்ற மாசைப் போக்கவேண்டும் என்று அவர் செய்த முயற்சி ஒப்பற்றது. இந்துக்கள் இந்தக் குற்றத்தை நெடுங் காலமாகச் செய்து வருவதால்தான அயல்நாட்டாருக்கு அடிமைப்பட்டு வருந்த நேர்ந்தது என்பது அவர் கருத்து. உயிரோடு வாழ்கின்ற மக்களைத் தீண்டாதவர் என்று ஒதுக்கிவைப்பது குற்றம் அல்லவா? செத்த உடம்பைத் தொடக்கூடாது என்பது மூடநம்பிக்கை என்றும், இறந்துபோன மனிதர்மேல் இரக்கம் பாராட்ட வேண்டும் என்றும், அவர்க்கு மரியாதை காட்டவேண்டும் என்றும், பிணங்களைத் தொட்ட பிறகு குளிப்பது ஆரோக்கிய விதியே என்றும், குளிக்கத் தவறுவது பாவம் அல்ல என்றும், தீண்டாமையைச் சமயத்தோடு தொடர்பு படுத்துவது சமயத்திற்குச் செய்யும் கொடுமை என்றும் அவர் தெளிவாக்கியிருக்கின்றார்.

இவ்வாறு பல குற்றங் குறைகள் இந்து மதத்தில் புகுந்து மாசு படுத்தியிருந்தாலும், அவர் மதத்தை வெறுக்கவில்லை. "அடிமுதல் முடிவரையில் சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்பதே என் கொள்கை. அவ்வாறு நான் சீர்திருத்தக்காரனாக இருந்தாலும், இந்து மதத்தின் உயிர் நாடியான கொள்கைகளை மறுக்க மாட்டேன்" என்றே தெரிவித்துவந்தார்.

## வழிபாடு

கோயிலுக்கோ பூசையறைக்கோ தனித்தனியாகப் போயிருந்து கடவுளை வழிபட்டு வரும் வழக்கமே இந்துக்

களிடம் பெரும்பான்மையாகக் காணப்படுவது. திரு விழாக் காலங்களில் திரளாகக் கூடுகின்றார்கள் ; ஆனால் அப்போது வேடிக்கையில் களிப்பது மிகுதியாக இருக் கின்றதே அல்லாமல் வழிபாட்டால் திருந்துவது மிகுதியாக இல்லை. இவ்வாறு தனித்தனியாக வழிபாடு செய்யும் பழக்கம் மன அடக்கத்திற்கு நன்மையே ஆனாலும், பொது நலத்தைப் போற்றுவதற்கும், மக்களெல்லாரும் குடும்ப மாக ஒற்றுமைப்பட்டு வாழ்வதற்கும் இது துணை செய் யாது ; ஒற்றுமை உணர்ச்சியையும் இது வளர்க்கவில்லை. கிறிஸ்தவர்களிடமும் முகம்மதியர்களிடமும் இந்தத் தனி முறையுடன் அமைதியாகக் கூடி வழிபடும் ஒழுங்கான பொதுமுறையும் காணப்படுகின்றது. இந்த நற்பண்பு ஆழ் வார்கள் நாயன்மார்கள் காலத்தில் கோயில்களில் இடம் பெற்றிருந்தது. இந்தச் சிறந்த பொதுவழிபாட்டு முறையை அமைதியாக நடத்திப் பழகவேண்டும் என்றே காந்தி யடிகள் பிற்காலத்தில் சென்ற இடங்களிலெல்லாம் மாலை வேளையில் தொழுகைக் கூட்டம் நடத்தினார் ; அந்தக் கூட்டங்களில் பொதுவழிபாட்டையும் பொதுநலஒற்றுமை யுணர்ச்சியையும் வளர்த்துப் போற்றினார்.

அவருடைய வழிபாட்டில் காணப்பட்ட மற்றொரு சிறப்பும் உண்டு. அதாவது, கடவுளிடம் பொன்னும் பொருளும் புகழும் வேண்டுகின்ற வாணிக வழிபாடும் இல்லை ; உலகம் பொல்லாதது என்று ஒதுக்கித் தனக்கு மட்டும் வீடுபேறு வேண்டுகின்ற தன்னல வழிபாடும் இல்லை ; கடவுளைத் தாயெனப் போற்றி, மக்களினமாகிய குடும்ப நன்மைக்கு - பொது நன்மைக்கு - உரிய தொண்டு செய்யும் ஆற்றலும் அறிவும் அன்புமே அவர் வேண்டிய வேண்டுகோள்களாக இருந்தன. அன்றாட வாழ்க்கை யைக் கடவுளுக்கு உரிய பணியாக நடத்திக் குறையை

நினைந்து வருந்தி இரங்கி அடைக்கலம் புகுகின்ற அன்பு நெறியே அவரிடம் காணப்பட்டது.

அவர் சமய ஒழுக்கமே வாழ்வாகக் கொண்டு வாழ்ந்த சான்றோர் ஆகையால், உண்மைச் சமய நெறியை உணர்வதற்கு அவருடைய எழுத்தையும் பேச்சையும் வாழ்வையும் கற்கும் கல்வி ஒன்றே போதும். காட்டில் மறைந்தும் குகையில் ஒதுங்கியும் செய்யும் தவத்தைப் போற்றாமல், "உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை" என்று திருவள்ளுவர் தெளிவித்த தவ வாழ்க்கையைத் தாங்கி ஒரு பெரிய நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் இறங்கி உலகத்தில் உலகமக்களோடு உலக வாழ்க்கை நடத்திய பெரியவர் ஆகையால், அவருடைய வாழ்க்கையே அனைவரும் பின்பற்ற வேண்டிய சமயநெறியாகும். இறைவன் எங்கும் என்றும் உள்ளவன் என்றும், எல்லாம் ஆனவன் என்றும் உணர்கின்ற ஆத்திகர் செய்யும் தொண்டுகளே இறைவழிபாடு என்று தெளிவித்த வாழ்க்கை அவருடைய வாழ்க்கை.

> கண்ணில் காண்பதுன் காட்சி கையால்தொழில்
> பண்ணல் பூசை பகர்வது மந்திரம்
> மண்ணொடு ஐந்தும் வழங்குயிர் யாவுமே
> அண்ணலே நின் அருள்வடி வாகுமே

என்று தாயுமானார் பாடிய வழிபாட்டுச் சிறப்பை அவருடைய வாழ்க்கை தெற்றென விளக்குகின்றது.

நீதிதர்மம் என்ற நூல் கிறிஸ்துவின் மணிமொழி ஒன்றைக் கொண்டு முடிகின்றது; "ஆண்டவனுடைய ஆட்சியையும் அறத்தையும் நாடுங்கள்; மற்றவை தாமாக வந்து சேரும்" என்பதே அந்த மணிமொழி. இவ்வாறு கடவுள் நெறியை - சமயத்தை - வலியுறுத்தி முடியும்

அந்த நூல் எவ்வாறு தொடங்குகின்றது? உண்மைச் சமயம் எது என்பதே அவர் தொடக்கத்தில் விளக்கும் உண்மையாகும். "போலித் தன்மையும் வஞ்சனையும் நம் காலத்தில் மேலோங்கி யுள்ளன. எந்தச் சமயத்தைச் சார்ந்த மக்களானாலும் சரி, அவர்கள் தம் தம் சமயத்தின் வெளிச் சடங்குகளில் மட்டும் அக்கறையாக இருக்கின்றார்கள்; சமயத்தின் அடிப்படை உண்மைகளைப் புறக்கணிக்கின்றார்கள். மேன்மேலும் பொருள் சேர்க்கும் ஆசையில் ஈடுபடுகின்றார்கள். இந்தப் பொருளாசை காரணமாகப் பிறர்க்குச் செய்யும தீமையைப் பற்றியும் கவலையில்லாமல் மறந்து விடுகின்றார்கள்" என்று இன்று உள்ள வாழ்க்கைப்போக்கைக் கடிந்து எழுதியுள்ளார்.

தப்பித் தவறிப் பிறர்க்கு உதவி செய்ய முன்வருகின்றவர்களும் தன்னலத்தோடு அவ்வாறு செய்கின்றார்கள் என்பதையும் அவர் கண்டு வருந்தியுள்ளார். புகழ் பெற வேண்டும் என்றோ, தம் பெருமையைக் காத்துக்கொள்ள வேண்டும் என்றோ, அல்லது வேறு தன்னலமான நோக்கத்தை வைத்துக்கொண்டோ ஏழைகளுக்கு உணவு இடுகின்றவர்கள் அறம் செய்கின்றவர்கள் அல்ல என்று விளக்கியுள்ளார். ஆசையால் செய்யும் உதவி அறம் ஆகாது என்பது போலவே, பயத்தால் உண்டாகும் பக்தியும் பக்தி அல்ல என்று எடுத்துரைத்தார். இவ்வாறு செய்யாவிட்டால் என்ன தீங்கு வருமோ என்று அஞ்சி வழிபடுவதை விட்டு, இவ்வாறு ஒழுகுவது நம் கடமை என்று உணர்ந்து வாழவேண்டும் என்பது அவர் கருத்து. "சன்மார்க்க விதிகளின்படி வாழ்ந்து, கைம்மாறு கருதாமல் பிறர்க்கு உதவி செய்வதே கடவுளை வழிபடும் சிறந்த வழி. பொல்லாதவர்களாகவும் ஒழுக்கமற்றவர்களாகவும் இருக்கின்ற பலர் கடவுளின் பெயரை வீணாகச் சொல்லிக் கொண்டு வாழ்கின்றார்கள். கடவுளின் பெயரைச் சொல்

வது எளிது. அதைக் கிளிப்பிள்ளைகளுக்கும் கற்றுக் கொடுக்கலாம். அதனால் கிளி பக்தியுடையதாகிவிடுமா?" என்று நீதிதர்மத்தில் விளக்கியுள்ளார். "ஒருவர் ராம நாமத்தை முணுமுணுத்துக்கொண்டே இருக்கலாம். செபமாலையை உருட்டிக்கொண்டு நாளெல்லாம் கழிக் கலாம். மக்களிடையே உத்தமர் போல் உலவலாம். ஆனால், உள்ளத்தில் தன்னலம் நிறைந்திருந்தால், அவர் ஆசாரக் கள்ளனே ஆவார்" என்று அண்ணல் எழுதிய தைப் படிக்கும் போது,

> வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்
> தானறி குற்றப் படின்

என்னும் திருவள்ளுவர் வாய்மொழியே நினைவுக்கு வருகின்றது.

## பரந்த பொதுநோக்கம்

குருவாயூர் கோயில் திறப்புத் தொடர்பாக எழுதிய அறிக்கை ஒன்றில், இந்துமதம் பண்டைய தூய்மையிலிருந் தும் ஆற்றலிலிருந்தும் வழுவிவிட்டது என்று குறிப்பிட்டு வருந்தினார். வேதங்களிலும் மற்ற நூல்களிலும் உள்ள உண்மைக் கருத்தை உணராமல், சொற்கள் உண்மைப் பொருள் உணர்த்தவந்த கருவிகளே என்பதையும் அறியா மல், சொற்களையே நோக்கமாகக்கொண்டு வாதாடும் வழக் கம் பெருகிவிட்டது என்று வருந்தினர். தாம் சொல்லும் கருத்து இந்த இடத்தில் பொருந்துமா என்றும், இந்தக் காலத்திற்குப் பயன் படுமா என்றும் ஆராயாமல், கற்றவர் கள் தம் கருத்தை வலியுறுத்துவதற்கு உயர்ந்த நூல்களைத் துணைதேடி, தம் விருப்பம்போல் பொருள் சொல்ல முற்படு கின்றார்கள் என்றும் சுட்டிக்காட்டி, தீண்டாமையை

ஒழிப்பதே கடமை என்றார். சமயத்துறையில் பரந்த நோக்கம் கொண்டுதான் ஆராயவேண்டும்; குற்றம் குறைகளை உடைய மனிதன் தன் மொழித்திறமையைக்கொண்டு சமயக் கொள்கைகளை விளக்கத் தொடங்குகின்றான்; மற்றவரும் இவ்வாறே தம் தம் குற்றம் குறைகளோடு பிறருக்குக் கூறுகின்றார்கள்; ஆகையால் சமய நம்பிக்கைகளில் தவறுகள் புகுகின்றன; அவற்றைச் சீர்திருத்தம் செய்துகொள்ளத் தயங்கவே கூடாது என்பது அவர் கொண்ட கொள்கை. அதனால்தான் அவர் பல வேறு சமய நூல்களையும் கற்றார்; கிறிஸ்துவ சமயம், இஸ்லாமிய சமயம், யூதசமயம், ஜொராஸ்தர் சமயம் முதலிய சமயங்களைப் பற்றித் தெரிந்துகொண்டார்; எல்லாச் சமயங்களிலும் உள்ள நல்ல கொள்கைகளைத் திரட்டித் தம் வாழ்க்கைக்கு ஒளிகாட்டப் பயன்படுத்திக்கொண்டார்; சமரச நெறியையே மற்றவர்களுக்கும் அறிவுறுத்தி வாழ்ந்தார்; சமய நெறியைப் போற்றினாரே அல்லாமல் சமய வெறிக்கு இடம் தரவில்லை; எல்லாச் சமயங்களும் ஒரு நெறியையே வற்புறுத்துவதாகவும் ஓரே அடிப்படையின் மீது கட்டப்பட்டிருப்பதாகவும் உலகறியப் பறைசாற்றினார்.

## புது முறைகள்

அரசியல் துறையில் புதிய புதிய போராட்ட முறைகளை எல்லாம் கையாண்டு சீர்திருத்தம் பல செய்தவர் காந்தியடிகள் அல்லவா? நகரங்களைத் திருத்துவதே குறிக்கோளாகக் கொண்டு அமைதியாக விண்ணப்பங்களை எழுதிக்கொண்டிருந்த அரசியல் அறிஞர்களைச் செயல் முறையில் தொண்டு செய்யப் பழக்கி நாட்டுப்புறங்களைக் கண் திறந்து பார்க்கச் செய்த பெருந்தகை அவரே அல்லவா? ஆடம்பரமான உடைவகைகளையும், ஆரவார

மான வாழ்க்கை முறைகளையும், பொதுமக்களுக்குத் தொடர்பில்லாத ஆங்கிலமொழி முழக்கங்களையும் நாட்டுத் தலைவர்கள் போற்றி வாழ்ந்த காலத்தில், அத்தனையும் விட்டு முற்றிலும் மாறான வழியில் தொண்டு செய்யத் தொடங்கி, நாட்டுப்புறத்துக் குடியானவரின் எளிய உடையையும், சிற்றூரின் அமைதியான வாழ்க்கைமுறை யையும், பொது மக்களின் பேச்சுமொழியையும் கொண்டே நாடு முழுமையையும் கலக்கி உலகத்தை விழிக்கச் செய்த பெருமையுடையவரும் அவரே அல்லவா? இந்தச் சீர்திருத் தத் துறையில் அவர் எவ்வளவு உறுதி பூண்டு விளங்கினார் என்று நினைந்து வியக்க வேண்டியுள்ளது. உலகத்தைப் பற்றிக் கவலை இல்லை, உற்றாரைப் பற்றிக் கவலை இல்லை, அறிஞரைப் பற்றியும் கவலை இல்லை, ஆள்வோரைப் பற்றியும் கவலை இல்லை, கொண்ட கொள்கையைப் பற் றியே கவலை, செய்யும் கடமையைப் பற்றியே கவலை என்று வாழ்ந்த பெருமையை அவருடைய வாழ்க்கையில் எப்பகுதி யிலும் காணலாம். தீண்டாமை எவ்வளவு பெரிய மாசு என்பதை இன்று நாடு உணர்ந்துவருகின்றது; ஆனால் இன்றும் காந்தியடிகளைப்போல் தீண்டாமைக்குச் சிறிதும் இடம் தராமல் வாழ்க்கை நடத்துவோர் எத்தனைபேர்? இன்றே இந்த நிலைமை இருந்தால், முப்பது ஆண்டுகளுக்கு முன் தீண்டாமையைப் போக்க முயன்றவர் யார்? அதை விடச் செயலளவில் தீண்டாமையை ஒழித்து வாழ்க்கை யைத் தூய்மைப் படுத்திக்கொண்டவர் யார்? அப்படிப் பட்ட காலத்திலேயே காந்தியடிகள் தீண்டாமைப் பேய்க் குத் தம் குடும்பத்திலும் இடம் தரவில்லை. குடும்பப் போராட்டம் எவ்வளவு முதிர்ந்தாலும் சினம் கொள் ளாத அண்ணல் இந்தத் துறையில் மட்டும் ஒரு முறையில் தம்மோடு ஒத்துழைக்காத கஸ்தூரிபாயைச் சினந்து வெறுக்கவும் நேர்ந்தது. ஆனால், அண்ணல் வெற்றி பெற்

றூர்; அன்னையார் மனம் திருந்தினார். பெண் குழந்தை இல்லாத குறையைப் போக்க, தீண்டாதார் குடும்பத்துச் சிறுமி ஒருத்தியையே மகளாக ஏற்று வளர்த்து மகிழும் அளவுக்குச் சீர்திருத்த வெற்றி பெற்றார். அவருடைய வாழ்க்கையில் சீர்திருத்தம் என்பது மேடையில் வாயளவில் உலவுவது அல்ல; அது முதலில் அவருடைய உள்ளத்தில் ஒளிவீசும்; பிறகு குடும்பத்தில் இருளைப் போக்கும்; பிறகுதான் உலக இருளைக் கடியும் கதிரவனாக எழும்.

சமயம் என்பது அறநெறி என்று உணர்ந்தவர் அவர். ஒழுக்கம் தவறுவதே சமயநெறியிலிருந்து பிறழ்வது என்பது அவர் கொள்கை. ஆகையால், "சமயத்தின் பெயரால் செய்யப்படும் கொடுமைகளை நான் ஏற்க மாட்டேன். பண்டை நூல்கள் கடவுள் தன்மை உடையவைகளே. ஆனால் அறிவிற்குப் பொருந்தியவைகளாக இருக்க வேண்டும். இல்லையானால் நூல்களின் கடவுள் தன்மையையும் மறுப்பேன" என்று விளக்கியுள்ளார். தம் வாழ்க்கைவிளக்காகப் போற்றிவந்த பகவத்கீதையைப் பற்றியும் அவர் கொண்ட கொள்கை தெளிவானது. கீதையில் இரண்டாம் அத்தியாயம் இறுதி 19 சுலோகங்களும் 18-ம் அத்தியாயம் முழுவதும் உயர்ந்த உண்மைகளைக் கூறுவன என்றும், அவற்றிற்கு மாறான கருத்துக்கள் மற்றப் பகுதிகளில் இருந்தால் அவைகளைப் போற்றலாகாது என்றும் விளக்கியுள்ளார்.

## புரட்சி வீரர்

சீர்திருத்தத் தலைவர்கள் எல்லோரும் புரட்சி செய்வதில் அஞ்சாத வீரர்களாகவே வரலாற்றில் விளங்குகின்றார்கள். அன்பையும் அமைதியையும் அறத்தையுமே போற்றிப் பரப்பிய காந்தியடிகளும் புரட்சி வீரரே. பலகோடி மக்களின் வாழ்க்கையை மாற்றி அமைத்த

புரட்சி வீரர் அவர். எளிய வாழ்வுக்கே ஏற்றம் உண்டாக்கிய புரட்சி, பிறமொழியில் பேசினால் பிற்போக்கு என்று உணர்த்திய புரட்சி, பழைய நல்ல கொள்கைகளைப் பண்பாடு என்று போற்றிய புரட்சி, புதிய நாகரிகத்தைக் கண்மூடி ஏற்றுக் கொள்ளாமல் ஒதுக்கிய புரட்சி, விஞ்ஞானம் என்றால் தலைவணங்கி வழிபடாமல் சீர்தூக்கிப் பயன்படுத்த முனைந்த புரட்சி, அதிகாரி என்றால் அஞ்சி அலறாமல் வரிப்பணத்தைச் சம்பளமாகப் பெற்றுக் குடிமக்களுக்குப் பணி செய்ய வந்த தொண்டன் என்று அளந்தறிந்த புரட்சி, அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி என்று அமையாமல் குடிகளின் வழியே அரசின் வழி என்று எண்ணும் ஆற்றலைப் பெருக்கிய புரட்சி, கடற்படை நிலப்படை வானப்படை உடைய வல்லரசை ஆளுலும் கண்ணீர்ப் படைக்குமுன் கலக்கமடையச் செய்யலாம் என்று செய்துகாட்டிய புரட்சி முதலான பலவகைப் புரட்சிகளையும் செய்த வீரர் காந்தி அண்ணல். இந்த ஆற்றலை அவர் எவ்வாறு பெற்றார்?

"பலர் சென்ற வழியில் செல்வது அறநெறி அல்ல. தக்க வழி எது என்று ஆராய்ந்து அந்த வழியில் நடக்க வேண்டும். உண்மையைக் கடைப்பிடிக்காமல் முன்னேற்றம் அடைய முடியாது. முன்னேற்றமும் சீர்திருத்தமும் அறநெறியோடு பிணைக்கப்பட்டிருக்கின்றன."

"செய்வது தகுமா தகாதா என்பதை எண்ணாமல் மற்றவர்கள் வாழ்க்கையைப் பார்த்துப் பின்பற்றுகின்றவன் அறம் என்ன என்று அறிந்துகொள்ள முடியாது. உலக வரலாற்றில் வெற்றி வீரர்களாக விளங்கியவர்கள் எல்லோரும் உலக நன்மையைக் கருதிப் பழைய வழிகளை விட்டுப் புதுவழிகளில் வாழ்ந்து காட்டியிருக்கின்றார்கள். ஒன்றைப் பற்றி ஆராய்ந்து முடிவுகாண்பதிலும் அதை வெளிப்படுத்துவதிலும் தன் அறிவுக்குப் பொருத்தமானதை நடைமுறையில் போற்றுவதிலும் அஞ்சாமல் வாழ்க்கை நடத்த வேண்டும்; இல்லையானால் அவனை அறவோன் என்று சொல்லமுடியாது. தன் மனச்

சான்று என்ன சொல்கின்றதோ அதுவே கடவுளின் ஆணை என்றும், தன் செயல்களின் நன்மை தீமைகளை ஆராய்ந்து முடிவுகாண வேண்டியது தன் மனமே என்றும் உணரவேண்டும். அப்படி உணர்ந்தால்தான் உள்ளத்தில் உணர்ந்ததை அஞ்சாமல் வெளியிடும் ஆற்றல் வளரும்."

இவ்வாறு அவர் எழுதியுள்ள பொன்மொழிகளைப் படித்தால் அவருடைய புரட்சி யுணர்வுக்கு அடிப்படை எங்கே இருந்தது என்பதை அறியலாம். அறநெறியே பொருளாகக் கொண்ட அவருடைய தூய மனச்சான்று தான் இந்தப் புரட்சியுணர்வுக்கு அடிப்படை. அதனால் அவருடைய புரட்சியில் கொடுமையும் ஆத்திரமும் தலை காட்டாமல் அன்பும் அமைதியும் நிலவியிருந்தன. கொடுமையும் ஆத்திரமும் தோன்றி அழியும் பெருவெள் ளம் போன்றவை; அழிவு வேலைக்கே பெரிதும் பயன் படுகின்றவை. அன்பும் அமைதியும் நின்று நிலவும் நீர் நிலை போன்றவை; ஆக்க வேலைக்கே பயன்படுகின்றவை.

அண்ணலின் பூணூல் அனுபவம் அனைவரும் அறிந்து கொள்ள வேண்டிய உண்மை பொதிந்ததாக இருக் கின்றது. சிறுவனாக இருந்தபோது, பூணூலில் சாவிக் கொத்தை முடித்துக்கொண்டு விளையாடும் சிறுவர்களைக் கண்டு பொறாமை கொண்டாராம். தமக்கும் பூணூல் வேண்டும் என்று ஆசைப்பட்டாராம். பூணூல் அணியும் வாய்ப்பு நேர்ந்து அணிந்து கொண்டபோது, தேவை இல் லாமலேயே ஒரு சாவிக் கொத்தை வாங்கி முடித்துக் கொண்டு மகிழ்ந்தாராம். அந்தப் பூணூல் நாளான பின் நைந்து அறுந்துவிட்டதாம். அதற்குப் பிறகு புதிய பூணூலை அவர் தேடவில்லையாம். இது இளமை அனு பவம். வளர்ந்த பிறகு, பலர் பூணூல் அணிந்துகொள் ளும்படி அறிவுறுத்தினார்களாம். ஆனால் அவர்களுடைய முயற்சி பலிக்கவில்லை. அப்போது சாவிக் கொத்தை

ாட்டி விளையாடும் விளையாட்டு எண்ணம் இல்லை
யல்லவா? உலக அறிவும் மற்றவர்கள் வாழ்க்கை பற்றிய
ன்பு உணர்வும் வளர்ந்த நிலையில் அப்போது இருந்த
டியால், அவருடைய மனத்தில் புதிய தடைகள் தோன்
ின. "சூத்திரர் என்னும் நான்காம் வருணத்தாரும்
ிந்துக்களே அல்லவா? அவர்களுக்குப் பூணூல் இல்லாத
பாது மற்ற மூன்று வருணத்தார்க்கு மட்டும் பூணூல்
தற்காக?" என்று கேள்வி கேட்கத் தலைப்பட்டார்.
தவை இல்லாத ஒன்றை வழக்கப்படுத்திக் கொள்வதற்
க் காரணம் இல்லையே என்று எண்ணிப்பார்த்தார்.
ீண்டாமையும் சாதி பற்றிய உயர்வு தாழ்வுகளும் வேறு
ல குறைகளும் வெளி ஆரவாரங்களும் இந்துமதத்தி
ிருந்து ஒழியும் வரையில் பூணூல் வேண்டியதில்லை
ன்று பூணூலை வற்புறுத்திய ஒருவரிடம் மறுமொழி
ாகத் தெரிவித்தார். இதைக் குறித்து அவர் சத்திய
சாதனையில் எழுதும்போது ஒரு சிறந்த கருத்தை வெளி
ிட்டுள்ளார்: "சமயங்கள் பலவாக இருப்பதனால் ஒவ்
வாரு சமயத்துக்கும் தனித் தனிச் சின்னம் தேவையாக
ிருக்கலாம். ஆனால் அந்தச் சின்னமே மெய்ப்பொருள்
ன்னும் கருத்தும், மற்ற மதங்களைவிடத் தம் மதமே
யர்ந்தது என்று சான்றாகப் பயன்படுத்தும் தவறான
பாக்கும் இருக்கும்போது, அந்தச் சின்னத்தை விட்டுவிடு
தே கடமை" என்று எழுதியுள்ளார். அவ்வாறே அவர்
மயச் சின்னங்களைத் துறந்து வாழ்ந்தார்.

## பெண்ணின் பெருமை

பெண்களின் நிலையை உயர்த்துவதில் அண்ணல் செய்த
தாண்டும் ஒப்பற்றது. வழக்கம்போல், இந்தத் துறையி
ும் அவர் பேசியதும் கடிந்ததும் குறைவே; ஆனால் அன்
ட வாழ்க்கையில் அவர் அமைதியாகச் செய்த சீர்திருத்

தங்களுக்கு அளவே இல்லை. ஆசிரமநடவடிக்கைகளே ஆனா லும், அரசியல்தொண்டே ஆனாலும் அவர் பெண்களுக்குச் சிறப்பும் மதிப்பும் கொடுத்துப் போற்றி வந்தார். பெண் இனத்தைத் தாழ்த்துவது அல்லது புறக்கணிப்பதென்றால், நாட்டின் வாழ்வில் ஒரு பாதியைக் கெடுத்துப் பாழ்படுத்து வது என்றும், ஓர் உடம்பில் ஒரு பக்கத்துக் கைகாலை ஒடுக்கி முடக்கும் பாரிசவாயு போன்ற நோய்நிலை என்றும் 1917-ஆம் ஆண்டிலேயே ஒரு மாநாட்டில் தம் கருத்தைத் திட்டமாகப் புலப்படுத்தினார். துளசிதாசரின் இராமாய ணத்தில் பெண்கள் அடிபடப் பிறந்தவர்கள் என்னும் பொருளுடைய செய்யுள் ஒன்று காணப்படுகின்றது. அதைப் பற்றித் தம் கருத்தை வெளிப்படுத்த நேர்ந்த போது, அந்தச் செய்யுளைப் போற்றாமல் ஒதுக்கவேண்டும் என்றும், அந்தக் காலத்தில் இருந்த ஒரு பழமொழியை ஆசிரியர் புகுத்தியிருக்கலாம் என்றும், இழிவான கருத் துடைய பகுதிகள் எந்த நூலிலிருந்தாலும் ஏற்காமல்விட வேண்டும் என்றும், துளசிதாசர்மேல் தாம் எவ்வளவு மதிப்புக் கொண்டிருந்தாலும் கண்மூடியாகத் தொழுது எல்லாவற்றையும் அப்படியே ஏற்றுக்கொள்வதில்லை என்றும் அறிவுறுத்தினார். பெண்ணினம் பெருமையுடை யது என்றும், பல வேளைகளில் பெண்களின் முன் யோசனை சிறப்புடையதாக உள்ளது என்றும் அவர் கருதி னார். தம் மனைவியிடம் தாம் தவறாக நடந்துகொண்டதை நினைந்து வருந்தி எழுதும்போது, பெண்மக்களைப் புகழ்ந்து கூறியுள்ளார்: "பெண்மக்களைப் பொறுமையின் திருவுரு வங்களாகப் போற்றுகின்றேன்" என்று எழுதியுள்ளார்.

## இயற்கை மருத்துவம்

கெட்ட எண்ணங்களும் செயல்களும் மனநோயால் விளைவன என்று மனநோயைக் காரணம் கண்டு தீர்க்கும்

மருத்துவராக விளங்கினார் காந்தி அண்ணல். வெளித் தோற்றத்தைக் கண்டு மயங்கி ஆட்களை வெறுக்கவும் ஒறுக்கவும் முற்படவில்லை. அதுபோலவே உடல் நோயை யும் ஆராய்ந்து அடிப்படைக் கோளாறு எங்கே என்று கண்டு அதைப் போக்க முயன்றார். தலைநோய், அம்மை நோய் என்று அந்தந்த நோய்களின் இடத்தைக் கண்டு, அங்கங்கே மருந்து இட்டுக் குணப்படுத்துவதில் அவருக்கு நம்பிக்கை இல்லை. இதை அவர் மிக வன்மையாகக் கடிந் திருக்கின்றார். தலைநோய் ஏன் வந்தது, அம்மைநோய் ஏன் வந்தது என்று ஆராய்ந்து உணர்ந்தார். இயற்கை மருத்துவர்களாக மேல்நாட்டில் வாழ்ந்த பல அறிஞர் களின் அனுபவத்தை எல்லாம் பயன்படுத்திக்கொண் டார்; தாமும் தம அனுபவத்தால் உணர்ந்து எண்ணி முடிவுக்கு வந்தார். நோய்களை மருந்து கொடுத்து அடக்குவதால் பயனில்லை என்று தெளிந்தார். வயிறு கெடுவதே நோய்களின் அடிப்படை என்று உணர்ந்து, தூய உணவு உண்டு, போதிய உழைப்பு உழைத்து, நல்ல முறையில் உணவு செரிக்கப்பெற்று, மலச்சிக்கல் இல்லா மல் வாழவேண்டும் என்றார்; அதுவே இயற்கை மருத்து வம் என்று ஆரோக்கியவழி என்ற நூல் எழுதினார்.

> மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
> அற்றது போற்றி உணின்

என்ற திருக்குறளுக்கு விளக்கம் காணவேண்டுமானால் அந்த நூலில்தான் காணவேண்டும்.

"நோய்களின் அடிப்படைக் காரணங்களில் அறியா மையும் ஒன்று. அறியாமையால் எளிய நோய்களைப் பற்றியும் கலங்குகிறோம். உடல் நலம்பெறவேண்டும் என்ற கவலை மிகுவதால் நோயையும் வளர்த்துக்கொள் கிறோம். உடல்நலம் பற்றிய எளிய வழிகளும் நமக்குத்

தெரிவதில்லை. அதனால், இயற்கை அல்லாத புதுவழி களைத் தேடுகிறோம்; வைத்தியர் என்று சொல்லிக் கொள்ளும் எவரிடத்திலும் உடம்பை ஒப்படைக்கிறோம். தொலைவிலுள்ளவைகளைப் பற்றி விரிவாக அறிந்துகொள் கிறோம்; ஆனால், நம்மை அடுத்துள்ளவைகளைப் பற்றி நாம் அறிந்துகொள்வது குறைவே; இப்படி நாம் இருப் பது வியப்பாகவே இருக்கிறது. நம் கிராமத்தைப் பற்றி நமக்கு ஒன்றும் தெரியாவிட்டாலும், இங்கிலாந்திலுள்ள ஆறுகளையும் மலைகளையும் பற்றி மனப்பாடமாகச் சொல்லுகிறோம். விண்ணில் உள்ள விண்மீன்களின் பெயர்களைப் பாடுபட்டுக் கற்றுக்கொள்கிறோம்; ஆனால், வீட்டுப் பொருள்களின் பெயர்களைத் தெரிந்துகொள்வ தில்லை. கடவுளின் படைப்பில் வியக்கத்தக்க காட்சிகள் நம் கண் எதிரே விளங்குவதைக் காண்பதில்லை; ஆனால், நாடக மேடைகளில் காணப்படும் தீய காட்சிகளைப் பார்க்க மிகமிக விரும்புகிறோம். அதுபோல், நம் உடம்பின் அமைப்பைப் பற்றியாவது, எலும்பும் தசையும் வளரும் வளர்ச்சியைப் பற்றியாவது, இரத்த ஓட்டத் தைப் பற்றியாவது, கெட்ட எண்ணங்களும் தீய குணங் களும் எப்படி உடல்நலத்தைக் கெடுக்கின்றன என்ப தைப் பற்றியாவது, உடல் ஓய்ந்திருக்கும் போதும் மனம் எப்படி நெடுந்தொலைவு அலைகின்றது என்பதைப் பற்றி யாவது நாம் அறிந்துகொள்வதில்லை. இந்த அறியாமை பற்றி வெட்கப்படுவதும் இல்லை. நம் உடம்புக்கும் நமக்கும் உள்ளதுபோல் நமக்கும் வேறு எதற்கும் அவ்வளவு நெருங் கிய தொடர்பு இல்லை. ஆனாலும், உடம்பைப் பற்றி நாம் அறியாமலும் கவலையில்லாமலும் வாழ்வதுபோல் வேறு எதைப் பற்றியும் அவ்வளவு அறியாமையும் கவலை யின்மையும் கொண்டு வாழ்வதில்லை" என்று ஆரோக்கிய வழியில் அறிவுரை வழங்கியுள்ளார்.

இந்த முயற்சி பெருகுவதற்கு அவருடைய வாழ்வில் இடமில்லாமல் போயிற்று. இரவும் பகலும் இந்தியரின் அடிமைத் தன்மையையும் வறுமைத் துன்பத்தையும் போக்கப் பாடுபட்டவர்க்கு இந்தத் துறையில் உழைக்க நேரம் வாய்க்கவில்லை. ஆனாலும் இயன்ற அளவு தம்மைச் சூழ்ந்தவர்களுக்கு இந்த வழியைக் காட்டினார். இந்தக் கலையைப் பரப்புவதற்கு ஒரு கல்லூரி - இயற்கை மருத்து வக் கழகம்-பெரிய அமைப்பாக ஏற்படுத்த வேண்டும் என எண்ணினார். வேறு ஒருவர் தொடங்கிய முயற்சிக்கு ஓரளவு துணையாக இருந்து ஒரு சங்கத்தில் தாமும் சில காலம் மருத்துவராகத் தொண்டு ஆற்றினார். எதையும் கண்மூடிக் கறகாமல் ஆழ்ந்து நோக்கி உண்மை கண்டு தெளியும் முயற்சிச் சிறப்பு அவரிடம் இருந்தது என்பதற்கு இந்தத் துறையில் அவர் ஆற்றிய தொண்டும் எடுத்துக்காட்டாக இருந்தது.

தம் சத்திய சோதனையில் 'நீர் சிகிச்சையும் மண் சிகிச்சையும்' என்ற தலைப்பில் தம் அனுபவத்தைச் சுருங்க எழுதுமிடத்தில், "மண் சிகிச்சை நீர் சிகிச்சைகளில் என் நம்பிக்கை இன்றளவும் குறையவில்லை. இன்றும் ஓரளவு மண் சிகிச்சையைப் பழக்கத்தில் கையாண்டு வருகிறேன். வாய்ப்பு நேரும்போது என்னைச் சார்ந்தவர்களுக்கும் இந்த வழியைச் சொல்லிவருகிறேன்" என்று எழுதியுள்ளார். "என்னுடைய வாழ்க்கை முறை எளியதாக மாறிக்கொண்டு வரவர, மருந்துகளிடம் வெறுப்பும் வளர்ந்து வந்தது" என்றும் குறிப்பிட்டிருக்கின்றார்.

# 4

# உணர்வு

## பொதுநலமே நோக்கம்

சமுதாயத்தின் தொடர்பான எண்ணங்களும் செயல்களும் பெருகவேண்டும் ; தனிமனிதர் தொடர்பான எண்ணங்களும் சடங்குகளும் குறையவேண்டும். இது ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்குத் துணை செய்யும். காந்தி அண்ணல் நாட்டு விடுதலை பற்றிய போராட்டத்தில் நினைவுக்கு உரிய நாட்களை மறந்ததில்லை ; அந்தந்த நாட்களில் நாட்டுமக்களின் நன்மையை நினைத்தும் நினைவூட்டியும் தொண்டு செய்யும் ஆற்றலைப் பெருக்கிவந்தார். ஆனால் தனிமனிதர் தொடர்பான நாட்களை அவ்வளவாகப் போற்றவில்லை. தம் முடிவிற்கு ஒரு வாரத்திற்கு முன் சுபாஷ் சந்திர போஸின் நினைவுநாளன்று தொழுகைக் கூட்டத்தில் பேசியபோது அவருக்கு அந்த நாளை யாரோ நினைவூட்டினார்கள். அதை அறிந்த அவர், " பொதுவாக எனக்கு இது போன்ற நாட்கள் நினைவு இருப்பதில்லை. பிறந்த நாளையும் இறந்த நாளையும் நான் அவ்வளவாகப் போற்றுவதும் இல்லை. இப்படிக் கவலையற்றிருப்பது தவரு இல்லையா என்பதும் எனக்குத் தெரியவில்லை. ஆனாலும் எனக்கு இந்தத் தியாகியின் நாளை இப்போது நினைவூட்டியதும் மகிழ்ச்சி அடைகின்றேன் " என்று குறிப்பிட்டார். பரந்த உலகத் தொண்டு என்று வாழ்க்கையை நடத்த முன்வந்தவர் வேறு எவ்வாறு எண்ணி வாழ முடியும் ? மக்களினமாகிய பெருங் கடலில் கலந்து

கரைந்துபோக முனைந்தவர்களுக்குத் தனிவாழ்க்கைகள் நினைவில் நிற்பது அரிது. அதனால்தான் அவருடைய கண் பட்ட இடத்திலெல்லாம் காசை வாரி இறைத்த பெருஞ் செல்வர்களையும் அவர் புகழ்ந்து போற்றவில்லை; நண்பர் என்று குடும்ப உறவு கொண்டு அவர் செல்வர் பலரோடு அன்புடன் பழகியது உண்டு. ஆனால் அவர்கள் பெரிய அறத் தொண்டுகளில் பணத்தைச் செலவழிப்பது கண்டும், கடமையைச் செய்கின்றார்கள் என்றே உணர்ந்தார்; அதற்காகப் புகழ்ந்து போற்றிக்கொண் டிருக்கவில்லை.

உண்மையே கடவுள் என்று காந்தியடிகள் நம்பியவர் ஆகையால், அன்பு நெறியில் - அஹிம்சை வழியில் - அந்த மெய்ப்பொருளைக் காண்பதே வாழ்வாகக் கொண்டு தொண்டு செய்தார். அதனால் வீர வழிபாடு அவருடைய வாழ்க்கையில் இடம் பெறவில்லை. உலகத்தார் எல்லாரும் மதித்துப் போற்றும் தூயவாழ்க்கை தம்மிடம் அமைந்திருந்தும், தம்மைப் பிறர் வழிபடுவதற்கும் அவர் இடம் கொடுத்ததில்லை. யாராவது காலைத் தொட்டு வழிபட வந்தாலும், வேண்டாம் என்ற சொல்லே அவர் வாயில் வந்தது. தம் காலில் விழுந்து வணங்குவதையும் அவர் தடுத்துவந்தார். தம்முடைய உருவச்சிலை அமைத்துக் கோயில் கட்டிய அன்பர் ஒருவருடைய முயற்சியை அவர் எள்ளளவும் விரும்பாமல், மிக வன்மையாக அறிவுரை கூறி, அதை மாற்றியமைக்கச் செய்தார். மகாத்மா என்று தம்மை மற்றவர்கள் அழைப்பதையும் அவர் மறுத்துவந்தது உலகம் அறிந்த உண்மை. "மற்றவர்களுக்கு இல்லாத சிறப்பு என்னிடம் எதுவும் இல்லை. கடவுள் எனக்கு மட்டும் தனியாக ஒன்றும் அருளவில்லை. மற்றவர்களைப் போல் நானும் குற்றம் குறை உடையவன். ஆகையால் நானும் சாதாரணமான சமூகத் தொண்டன்" என்று அவர் எடுத்துரைத்துவந்தார். தம் பெயரால்

நிலையங்கள் ஏற்படுத்தும் முயற்சிகளையும் அவர் இயன்ற வரையில் தடுத்துவந்தார். தாம் புதிதாக ஒன்றும் சொல்லவில்லை என்றும், முன்னோர் கண்டு வெளிப்படுத்திய உண்மைகளையே அடிக்கடி நினைவூட்டி வருவதாகவும் அவர் கூறினார். இவற்றையெல்லாம் கருதும்போது, "வேண்டேன் புகழ்" என்ற பெருநிலையை அவர்பெற்றிருந்தார் என்பது தெளிவாகும். அதனால் தம்மைப் பொது மக்கள் போற்றும் வழிபாட்டுக்கு இடங்கொடுக்காமல் திருத்திவந்தார். அதனால்தான், தம் உடலையும் பலநாள் காத்து வைக்காமல், இறந்த உடனே கொளுத்த வேண்டும் என அறிவுறுத்தினார். தம் உடல் வீரவழிபாட்டையும் வீணான ஆரவாரச் சடங்குகளையும் மூட நம்பிக்கைகளையும் வளர்க்கக் காரணமாக இருக்கக் கூடாது என்றே அவர் அவ்வாறு அறிவுறுத்தினார்.

## அளவுகருவிகள்

காந்தியடிகளிடம் எதையும் அளந்து பார்க்க இரண்டு அளவுகருவிகள் இருந்தன. ஒரு செயல் நல்லதா தீயதா, தகுமா தகாதா என்று அந்த அளவுகருவிகளால் எளிதில் அளந்து முடிவு கண்டார். அந்த அளவுகருவிகள்: உண்மை ஒன்று, இன்னா செய்யாமை (அஹிம்ஸை) மற்றொன்று. சிலவேளைகளில் இந்தக் கருவிகளையும் பயன்படுத்தாமல், அமைதி பூண்டு மனச்சான்று காட்டும் ஒளியை எதிர்பார்த்திருந்தார். அங்குப் பிறக்கும் ஆணையை மதித்து நடந்தார். ஆயினும் பெரும்பான்மையும் அவர் குறிக்கோளாகக் கொண்டது இன்னா செய்யாமை (அஹிம்ஸை) என்றும் அறத்தையே ஆகும். யக்ஞம் என்ற சொல்லின் பொருளை விளக்கியபோது இந்தக் குறிக்கோளைக் காணலாம். பிறருடைய நன்மையை விரும்பிக் கைம்மாறு கருதாமல் செய்யும் தொண்டே யக்ஞம்

என்று விளக்கினர். "மக்களுக்கே அல்லாமல் மற்ற உயிர்களுக்கும் தீமை செய்யக் கூடாது; மக்களின் நன்மைக்காக விலங்குகளைப் பலியிடுவதும் கூடாது; வேதத்தில் மிருக பலியைப் பற்றிக் கூறியிருந்தாலும் நாம் அதைப் பொருட்படுத்தக் கூடாது; உண்மைக்கும் இன்னா செய்யாமைக்கும் மிருகபலி என்பது முற்றிலும் முரணானது; வேத நூல்களில் எனக்குப் பழக்கம் இல்லை; அதற்காக நான் வருந்தவில்லை; வேதநெறி மிருகபலியை உடன்பட்டிருந்தாலும் அறத்தைக் கடைப்பிடிப்பவர் அதை ஒப்புக்கொள்ள மாட்டார்கள்" என்று இன்னா செய்யாமையே குறிக்கோளாகக் கொண்டு விளக்கினர். சங்கரநயனார்கோயிலில் மிருகபலியைப் பற்றிக் கேள்வியுற்றபோது, வாயில்லாத உயிர்களை வதைக்கும் இடங்களை எப்படிக் கோயில் என்று சொல்வது என்று வருந்தினர். நாட்டு விடுதலைக்காக நடத்திய பெரிய போராட்டத்திலும் இந்த நோக்கமே தலைசிறந்திருந்தது. ஆங்கில நாட்டிலே அவர் ஒருமுறை பேசியபோது, "ஆள்வோருக்குத் துன்பம் உண்டாக்காமல் இந்தியரின் இரத்தத்தைக் கங்கையாறு முழுதும்பரப்பியாவது உரிமை பெறவேண்டும் என்பதே என் நோக்கம்" என்று தம் உறுதியைத் தெரிவித்தார். அவ்வப்போது நடத்திய இயக்கங்களில் கொலை முதலிய அழிவுவேலைகள் தலைகாட்டி அறநெறியிலிருந்து சிறுகூட்டம் வழுக்கி வீழ்ந்தாலும், அதற்காக இயக்கத்தையே நிறுத்தி உண்ணா நோன்பும் இருந்து வருந்தினர். இவ்வாறு அவர் மேற்கொண்ட தவச்செயல்கள் பலவும் உலகம் அறிந்த செயல்களே. ஐக்கிய மாகாணத்தில் சௌரி சௌராவில் நடந்த ஊர்வலத்தில் மக்கள்கூட்டம் போலீஸாரைத் தாக்கித் துன்புறுத்தியதைக் கேட்டதும் அவர் கலங்கினர். "யாரோ செய்தார்கள். நான் சொன்னபடி கேட்கும் கூட்டத்

தாருக்குத்தான் நான் பொறுப்பாளி. அதற்கும் எனக்கும் தொடர்பு இல்லை" என்று அவர் சொல்லியிருக்கலாம். அப்படித் தனியே பிரிந்து நின்று பிறரை ஒதுக்கும் மனம் அவருக்கு இல்லை; அதற்கு மாருக மற்றவர்கள் செய்யும் பாவங்களிலும் தனக்குப் பங்கு உண்டு, பெரும் பங்கு உண்டு என்று கருதி நொந்து தவங் கிடக்கும் மனமே அவருக்கு இருந்தது. இரண்டாவது சட்ட மறுப்பியக்கம் நடந்து வந்த காலம் அது. இயக்கத்தை நிறுத்திஞல், மற்றவர்கள் இகழ்ந்து எள்ளுவார்களே என்று அவர் கவலைப்படவில்லை. மான உணர்ச்சி அவரிடம் தலை காட்டப் பார்த்தது. ஆஞல் தம் ஒருவருடைய தனிநலத்தையும் தனி ஆக்கத்தையும் தனிப் புகழையும் தனி வீடு பேற்றையும் நாடாத தன்னலமற்ற அந்தத் தூய உள்ளம் இந்தத் தனிமான உணர்ச்சிக்கு இடம் தருமா? "இந்தச் செருக்கு - இந்த மாயை - தலைகாட்டப் பார்க்கின்றதே" என்று விழிப்பாக உணர்ந்தார். உணர்ந்ததும், அதை அடக்குவதே கடமை என்று துணிந்து உடனே இயக்கத்தை நிறுத்திவிட்டார். ஐந்து நாள் பட்டினி கிடந்தார். "அரசியலின்படி பார்த்தால், நான் இயக்கத்தை நிறுத்தியது வீரம் அற்ற செயலாகத் தோன்றும். சமய நெறியை ஒட்டிப் பார்த்தால், நிறுத்தியது சரி என்றே தோன்றும். தவறு நேர்ந்துவிட்டதை ஒப்புக்கொள்வது மிக மிக மேலானது. உண்மையும் இன்ஞசெய்யாமையுமே நான் போற்றும் அறங்கள். தெய்வ சக்தி வேண்டும் என்று நான் விரும்பவில்லை. மற்றவர்களைப் போல நானும் சாதாரண மனிதனே. ஆகையால் நானும் தவறு செய்யக் கூடும். நாம் அவமானப் பட்டோம் என்ருவது, தோற்று விட்டோம் என்ருவது நம் பகைவர்கள் எள்ளிப் பேசட்டும். அறத்தை மீறி நடந்தோம் என்றும், பாவம் செய்து விட்டோம் என்றும் நாம் குற்றம் கூறப்படுவதைவிட

கோழைகளாகவும் வலிமையற்றவர்களாகவும் நடந்தோம் என்று எள்ளப்படுவது மேலானது" என்று நாட்டு மக்களுக்கு அறிவித்தார்.

அரசனை வாழ்த்தும் வாழ்த்துப் பாட்டில், தன்னலத்தோடு தம் செல்வாக்கை விரும்பியும், வெறுப்புணர்ச்சியோடு பகைவர்களின் தாழ்வை விரும்பியும் பாடும் பகுதிகள் அவருக்குப் பிடிக்கவில்லை. வேண்டுமென்றே ஒரு சாராரின்மேல் தீயஎண்ணத்தையும் பகையுணர்ச்சியையும் வளர்க்கும் அந்தப் பகுதிகளை அவர் கடிந்து விலக்கினார். சிலரைப் பகைவர்கள் என்று கற்பித்துக் கொண்டு அவர்கள் அழியவேண்டும் என்றும், தாம் மட்டும் நன்றாக ஓங்கவேண்டும் என்றும் விரும்புகின்ற மனம் அறம் துறந்த மனம் என்பது அவருடைய கருத்து.

சுதேசியம் என்று அவர் பரப்பிய அறத்தையும் இந்தப் பெருநோக்கத்தோடுதான் அறிவுறுத்தினார். "தூய நாட்டுத் தொண்டன் அயல்நாட்டானிடம் கெட்ட எண்ணம் கொள்ள மாட்டான்; உலகத்தில் ஒருவரையும் பகைத்துக்கொள்ள மாட்டான்; சுதேசியம் என்பது வெறுப்பிலிருந்து பிறப்பது அல்ல; அது தன்னலம் அற்ற தொண்டே ஆகும். இன்னாசெய்யாமையும் அன்பும் அதன் வேர்கள்" என்று வற்புறுத்திக் கூறிவந்தார்.

## இன்னாசெய்யாமை

இன்னாசெய்யாமை என்பது அண்ணலின் வாழ்க்கையில் கொலை முதலிய செயல் அளவில் மட்டும் கொள்ளப்பட்ட அறம் அல்ல. "உள்ளத்தால் உள்ளலும் தீதே" என்று திருவள்ளுவர் உள்ளத்தூய்மையை வற்புறுத்தியது போலவே, இவரும் வற்புறுத்திவந்தவர் ஆகையால், கருவி கொண்டு ஒருவன் மற்றொருவனுக்கு உண்டாக்கும் இன்னல் மட்டுமே ஹிம்சை என்று எண்ணிவிடக்

கூடாது என்றும், மற்றவர்களைப் பற்றி உள்ளத்தில் கெடுதலாக எண்ணுவதும், பொய் பேசுவதும, வெறுப்புக் கொள்வதும் அந்த அறத்திற்கு மாறுபட்டவைகளே என்றும் தெளிவாக்கினர். "ஒருவர் எவருக்கும் தெரியாமல் எண்ணும் எண்ணங்களும் அவருக்கும் மற்றவர்களுக்கும் நன்மையோ தீமையோ உண்டாக்குகின்றன என்பதை ஒவ்வொருவரும் உணரவேண்டும். ஆகையால் தீய எண்ணங்கள் உள்ளத்தில் புகாமல் ஒவ்வொருவரும் உள்ளத்தைக் காத்துக்கொள்ளவேண்டும்" என்று நீதி தர்மத்தில் எழுதியுள்ளார்.

இன்னசெய்யாமையைப் பற்றி அவர் கொண்டிருந்த கருத்து மிகத் தெளிவானது; உறுதியானது. 1916-ஆம் ஆண்டில் மாடர்ன் ரிவ்யூ என்ற இதழில் எழுதிய கட்டுரையில், ஆபத்து நேர்ந்தபோது சாவுக்கு அஞ்சி ஓடுகின்றவர்கள், யாராவது அப்போது குறுக்கிட்டுத் துன்பம் செய்கின்றவர்களைத் தொலைத்துத் தம்மைக் காப்பாற்றவேண்டும் என்று எண்ணுவார்களானல், அவர்கள் மகாவீரரையோ புத்தரையோ வேத நெறியையோ போற்றுகிறவர்கள் அல்ல என்று தெளிவாக்கினர். "வியாபாரத்தில் ஒருவரை ஏமாற்றி, அதன் வாயிலாக மெல்லக் கொல்லுகின்றோமே என்று கவலைப்படாதவரும் இன்னசெய்யாமையாகிய அறத்தைப் போற்றுகின்றவர் அல்ல. தம் நாட்டுக்கு நன்மை செய்ய வேண்டும் என்று அரசியல் காரணம் கருதி அதற்காக ஒருசில அதிகாரிகளைக் கொன்றாலும் கவலை இல்லை என்று இருப்பவரும் அறவோர் அல்ல. இந்தச் செயல்கள் எல்லாம் பகையும் கோழைத்தன்மையும் அச்சமுமே அடிப்படையாகக் கொண்டவை" என்று எழுதினர். "மகாவீரரும் புத்தரும் வாழ்க்கைவீரர்கள். டால்ஸ்டாயும் அவ்வாறே. அவர்கள் நம்மைவிட ஆழ்ந்த உண்மை

நோக்கு உடையவர்கள். அதனால்தான் உண்மையும் இன்பமும் மானமும் மாட்சியும் உள்ள வாழ்க்கைக்கு உரிய வழியைத் தேடிக் கண்டுகொண்டார்கள். இந்த உலக ஆசிரியர்கள் பெற்ற பெரு நன்மையில் நாமும் பங்கு கொள்ளும் முறையில் வாழ்க்கையை நடத்தவேண்டும்" என்று அந்தக் கட்டுரையை முடித்துத் தெளிவு உண்டாக்கினார்.

தம் சத்திய சோதனையின் இறுதியில் அவர் இன்னா செய்யாமையில் தமக்கு உள்ள உறுதியைப் புலப்படுத்திப் பின்வருமாறு எழுதியுள்ளார்: "உண்மையைத் தவிர வேறு கடவுள் இல்லை என்னும் கொள்கையையே என் அனுபவம் எல்லாம் உறுதிப்படுத்துகின்றன. என் வரலாற்றின் ஒவ்வொரு பக்கமும் உண்மைக்கு உரிய நெறி அஹிம்ஸையே என்பதை அறிவுறுத்தவேண்டும். இல்லையானால் என் முயற்சி வீணாகும். அவ்வாறு என் முயற்சி வீண் ஆனாலும், அது என் குற்றமே அல்லாமல் அந்தச் சிறந்த கொள்கையின் குறை அல்ல. அஹிம்ஸைத் துறையில் நான் எவ்வளவு தூய உள்ளத்தோடு முயன்றிருந்தாலும், என் முயற்சி குறையுடைய முயற்சியே ஆகும். உண்மையின் விளக்கத்தை ஒவ்வொரு நொடியில் அவ்வப்போது கண்டது உண்டு. ஆனால் அதைக்கொண்டு அந்தப் பேரொளியை நாம் அறிய முடியாது. நாம் நாள்தோறும் பார்க்கின்ற சூரியன்ஒளியை விடப் பலகோடி மடங்கு பேரொளி உடையது உண்மை. அதில் நான் கண்டது ஒரு சிறு அணுவான ஒளிக்கதிரே ஆகும். ஆனால் என் அனுபவம் எல்லாவற்றிற்கும் முடிவாக நான ஒன்றை உறுதியாகச் சொல்ல முடியும். அதாவது, பேரொளியாகிய உண்மையைக் காண வேண்டுமானால், அஹிம்ஸை என்னும் அறத்தைவிட வேறு வழியே இல்லை என்பதை உறுதியாகச் சொல்வேன்".

மற்றவர்களிடம் அன்பு காட்டவேண்டும் என்பதை விட மற்றவர்களுக்குத் தீமை செய்யக் கூடாது என்று உணர்வது வேண்டும்; நன்மை செய்தவர்களுக்குத் தீமை செய்யக்கூடாது என்பதை விட, தீமை செய்தவர்களுக்கும் தீமை செய்யக்கூடாது என்று உணர்வது சிறந்தது; தீமை செய்தவர்களுக்கும் நன்மை செய்ய வேண்டும் என்று உணர்வதே அதைவிடச் சிறந்தது; 1918 - ஆம் ஆண்டில் ஒரு கூட்டத்தில் போரில் அரசியலார்க்கு உதவவேண்டும் என்று அவர் பேசியபோது, "நன்மைக்குக் கைம்மாறாக நன்மை செய்வது பெருந்தன்மைக்கு அடையாளம் அல்ல; தீமை செய்தவர்களுக்கு நன்மைசெய்வதே பெருந்தன்மை" என்று கூறிய கருத்தை எண்ணினால்,

> இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
> என்ன பயத்ததோ சால்பு

என்னும் தமிழ்க்குறளே நினைவுக்கு வருகின்றது.

## அன்பின் சிறப்பு

அன்பைப் பற்றியும் அவர் இதே கருத்தைத் தெரிவித்துள்ளார். "அன்புக்குச் சோதனை பகைவனிடத்திலே அல்லாமல் நண்பனிடத்தில் அல்ல. ஒருவன் தன் நண்பனிடத்தில் அன்பு செலுத்தும்போது, அதில் புதுமை இல்லை; சிறப்பு இல்லை; முயற்சியும் ஒன்றும் இல்லை. பகைவனிடத்தில் அன்பு செலுத்தும்போதுதான் அதற்கு உரிய உண்மையான சோதனை நடைபெறுகின்றது; அப்போதுதான் அது அறமாகின்றது; அதில் முயற்சியும் அமைந்துள்ளது; அதுதான் வீரச் செயல்; அதுதான் உண்மையான ஆண்மை" என்பது அவருடைய பொன்மொழி. அஞ்சுகின்ற கோழையால் இப்படிப்பட்ட அன்பு காட்ட முடியாது என்றும், அஞ்சாத வீரன் மட்டுமே

இவ்வாறு அன்பு செலுத்த முடியும் என்றும் அவர் அன்பின் பெருமையை விளக்கியுள்ளார். "இரண்டுபேர் தமக்குள் நம்பிக்கை வைத்துக்கொண்டிருப்பதும் தமக்குள் ஒருவர்க்கொருவர் அன்புகாட்டுவதும் நம்பிக்கையும் அல்ல, அன்பும் அல்ல. திருடர்களிடமும் இப்படிப்பட்ட நம்பிக்கையையும் அன்பையும் காண்கின்றோம்" என்ற சொற்களாலும், பகைவரிடத்திலும் காட்ட வேண்டிய அன்பைச் சிறப்பிக்கின்றார்.

மறந்தும் மக்களுக்குத் துன்பம் செய்யாமல் வாழ வேண்டும் என்று அறவுரை வழங்கிய அண்ணல், மற்ற உயிர்களிடத்திலும் இந்த அறத்தைக் கடைப்பிடித்து ஒழுகினார். ஆசிரமத்தைச் சுற்றிலும் உள்ள இடங்களில் காணும் பாம்புகளையும் கொல்லக்கூடாது என்று சொல்லிவந்தார். ஓரறிவுயிர்களாகிய மரம் செடி கொடிகளைச் சிதைப்பதும் கூடாது என்று தடுத்து வந்தார். ஆசிரமத்துப் பூஞ்செடிகளிலும் கொடிகளிலும் பூத்த பூக்களை ஒருவரும் பறிப்பதில்லை. பூத்து உதிர்வதே அவைகளின் இயற்கையான வாழ்வு என்றும், அவற்றின் வாழ்வில் தலையிடக்கூடாது என்றும் அவர் கருதினார். பூமாலை முதலியன அணிவதையும் விலக்கினார். அவருடைய மெல்லிய கழுத்து அடிக்கடி பெற்று விளங்கிய மாலை கையால் நூற்ற கதர் நூல்மாலையே ஆகும். மக்கள் எண்ணியபடி அலங்காரம் செய்வதற்காக மரம் செடி கொடிகளைச் சிதைப்பது அறமல்ல என்று வற்புறுத்தினார். அழகு நோக்கிப் பறிப்பதும் தவறு என்பது அவர் கொள்கை. ஒரு முறை ஆசிரமத்தார் பறித்து வந்த இளந் தளிரும் தழையும் கண்டு நொந்து வருந்தினார். "வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்" என்று உருகிய இராமலிங்க அடிகளின் சிறந்த இரக்க உணர்வை இது நினைவூட்டுகிறது.

குழந்தைகள் தடைப்பட்டு விழுந்தால், விழுந்த இடத்தை உதைப்பது உண்டு. நாற்காலி முதலான பொருள்களின்மேல் தாக்கி அடிபட்டால், திருப்பி அவற்றை அடிப்பதும் உண்டு. வளர்ந்த பெரியோர்களிலும் சிலர் சில வேளைகளில் இவ்வாறு நடந்துகொள்கின்றார்கள். சிலர் காலில் கல் அடிபட்டால், அந்தக் கல்லின்மேல் சினம் கொண்டு காறியுமிழ்கின்றார்கள். இறப்பிலோ வாசல்பலகையிலோ தலை பட்டு நொந்தால், "பாழாய்ப் போன வீடு" என்று வீட்டைப் பழிப்பதும் உண்டு. இவைகள் எல்லாம் நகைக்கத் தக்க செயல்கள், அறியாமையின் விளைவுகள் அல்லவா? குழந்தை பொறுமை இழந்து நடந்துசென்ற தவற்றையும், கண்மூடிச் சென்று நாற்காலிமேல் மோதிய தவற்றையும் எண்ணிப் பார்ப்பதில்லை. வளர்ந்தவர்களும் வழி பார்த்து நடக்கத் தவறியதையும் தலை குனிந்து நுழையத் தவறியதையும் எண்ணிப் பார்ப்பதில்லை.

எத்தனையோ செயல்களைக் காந்தி இந்தக் கருத்தோடு எண்ணிப் பார்த்திருக்கின்றார். எதிர்ப்பவர்களின்மேல் சினம் கொள்வது, தீமை செய்தவர்களைப் பழிக்குப் பழி வாங்குவது, ஒத்துழைக்காதவர்களை வெறுப்பது முதலான செயல்களையும் அவர் அறியாமை என்றே கொண்டார். விழுந்த தரை தீமை செய்யவில்லை, அடிபட்ட நாற்காலிமேல் குற்றம் இல்லை, தடுக்கிய கல் தீமை அறியாதது, தடுத்த இறப்பும் வாசற்பலகையும் கெட்டவை அல்ல என்று உணரவேண்டும் அல்லவா? அதுபோலவே, எதிர்ப்பவர்களின்மேல் குறை இல்லை, தீமை செய்தவர்கள் கெட்டவர்கள் அல்ல, ஒத்துழைக்காதவர்கள் குற்றவாளிகள் அல்ல என்பதையும் அவர் உணர்ந்தார்; உலகம் உணரவேண்டும் என்று ஓயாமல் கூறிவந்தார். திருடியவனைத் தண்டிக்கக் கூடாது என்றும், அவன் திருடுவதற்

குக் காரணம் என்ன என்று ஆராய்ந்து அதைப் போக்கித் திருத்தவேண்டும் என்றும் விளக்கினர். 1932 - ஆம் ஆண்டில் குருவாயூர் கோயில் திறப்பின்போது, அங்கிருந்த அதிகாரியைப் பலரும் பழித்தபோது, " சீர்திருத்தக்காரர் கள் அந்த அதிகாரியைப் பழிக்கக் கூடாது. அது நல்ல முறை அல்ல : அவர் கோயிலைத் திறக்க மறுத்தால், பொதுமக்களின் விருப்பத்தை அவர் உணரவில்லை என்று என்னுவோம். அவருடைய மறுப்பைக் கண்டு பழிக்க முற்படக்கூடாது. நம்முடைய குறையை உணரவே முற்படவேண்டும் " என்று அறிக்கை வெளியிட்டார்.

அவர் மற்றவர்களின் கருத்து வேற்றுமைக்கு இடம் கொடுத்ததும் இந்த உயர்ந்த நிலையில் எண்ணிய காரணத் தால்தான். யந்திரங்களைப் போற்றியவர்களிடமும் கதர் இயக்கத்தை மறுத்தவர்களிடமும் அவர் மிக அன்பாக நடந்துகொண்டார். தாம் ஆத்திகராக இருந்தும் நாத்திகரிடம் அன்பு காட்டினர். நாத்திகத்தை வெறுத் தாலும் நாத்திகரை வெறுக்கவில்லை. ஒழுக்கக் கேட்டை வெறுத்தாலும் ஒழுக்கம் கெட்டவர்களை வெறுக்க வில்லை. ஆடம்பரத்தை வெறுத்தாலும் ஆடம்பரக்காரரை வெறுக்கவில்லை. பணத்தின் செல்வாக்கை வெறுத்தாலும் பணக்காரரை வெறுக்கவில்லை. தீண்டாமையை வெறுத் தாலும் அதை நம்பியவர்களை வெறுக்கவில்லை. மூட நம்பிக்கையை வெறுத்தாலும் மூட நம்பிக்கை உடைய வர்களை வெறுக்கவில்லை. கண்மூடி வழக்கங்களை வெறுத் தாலும், அவற்றிற்கு இடம் கொடுத்தல் பற்றி இந்துக் களையோ இந்து மதத்தையோ வெறுக்கவில்லை. ஆங்கில ஆட்சியை வெறுத்தாலும் ஆங்கிலேயரை வெறுக்கவில்லை. தந்திரத்தையும் வஞ்சத்தையும் வெறுத்தாரே அல்லாமல் தந்திரக்காரரையும் வஞ்சகரையும் வெறுக்கவில்லை. கல கத்தையும் கொடுமையையும் வெறுத்தாரே அல்லாமல்

கலகக்காரரையும் கொடியவரையும் வெறுக்கவில்லை. கொலையை வெறுத்தாரே அல்லாமல் கொலையாளியையும் வெறுக்கவில்லை.

ஆட்களின்மேல் வெறுப்பும் பகையும் கொண்டு எதிர்ப்பது அறியாமை என்பதும், அதனால்தான் மக்கள் தம் உள்ளத்தில் இருக்கின்ற தீமையை மறந்துவிடுகின்றார்கள் என்பதும் காந்தியடிகளின் கருத்தாகும். யாரிடமாவது குறைகண்டால், அதற்குக் காரணம் கண்டு அங்கே சீர்திருத்த முயல்வதே அவர்பழக்கம். அதை விட்டுக் கண் மூடி எழுந்து குறையுடையவரை வெறுப்பதும் ஒறுப்பதும் அவர் வாழ்க்கையில் இல்லை.

## கருத்து வேற்றுமை

அவரோடு நூற்றுக்கு நூறாக முழுமையும் கருத்து ஒத்தவர்கள் உலகத்தில் ஒரு சிலரே ; அந்தச் சிலரிலும், கருத்தும் செயலும் வேறுபடாதபடி அவர் வாழ்ந்த வாழ்க்கையை அப்படியே பின்பற்றியவர்கள் யார் என்று எண்ணிப் பார்ப்பதே அருமையாக இருக்கின்றது. ஆனால் அவரோ பிறருடைய கருத்து வேற்றுமையை மதிப்பதில் வல்லவராக விளங்கினார். நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது வகையில் கருத்து வேறுபாடு உடையவர்களும் அவரை நெருங்க முடிந்தது ; நெருங்கிப் பழக முடிந்தது ; அப்போதும், அவர் நூற்றில் ஒன்றான ஒற்றுமைப் பண்பை எடுத்துப் பாராட்டுவதையே கடமையாகக் கொண்டிருந்தார். தம்மைப் பகை எனக் கொண்டவர்களிடத்திலும் அவர் குறைகளை மறந்துகுணமே கண்டு போற்றினார். நெருங்கிப் பழகியவர்களைக் குறைகூறித் திருத்த முயன்றாலும், அவர்களிடமும் கருத்துவேற்றுமையைப் போற்றி வாழ்ந்தார். அதனால்தான், அடிமைநாட்டில் ஒரு பெரிய இயக்கத்தை நடத்த அவரால் முடிந்தது. அந்த

இயக்கத்தில் பலரையும் ஒன்று சேர்த்தார். அப்படிச் சேர்ந்த தலைவர்களோ இவருடைய கொள்கைகளையும் வழிகளையும் முற்றிலும் போற்றியவர்கள் அல்ல; பல வகையில் வேறுபட்டவர்கள்; சிலவகையில் முரண் பட்டவர்கள். ஆயினும், பண்புகளை மட்டும் அறிந்து போற்றிய அன்பினால் அவர் அவர்கள் எல்லோரையும் பிணைத்துப் பெரிய இயக்கம் நடத்தினார். அவருடைய கதர்த் தொண்டில் சிலருக்கு நம்பிக்கை இல்லை; யந்திரத் தொழிற்சாலைகளைப் பெருக்குவதில் பலர் நாட்டம் கொண்டவர்கள். அவருடைய அஹிம்ஸை நெறியில் சிலருக்கு நம்பிக்கை இல்லை; பட்டாளமும் படையும் பெருக்கி ஆட்சிபுரிவதிலேயே அவர்கள் நம்பிக்கை கொண் டவர்கள். செல்வர்கள் அறக்காப்பாளராக - தர்மகர்த் தாக்களாக - இருந்து தம் செல்வத்தைப் பொது நன்மைக் குப் பயன்படுத்த வேண்டும் என்று அவர் கூறியது நடைமுறைக்கு வராதது என்று பலர் கருத்து வேறு பட்டார்கள். காமச் சேர்க்கை கூடாது என்றும், பிரம சரியம் மேற்கொண்டு இல்லறம் நடத்த வேண்டும் என்றும், மருந்தில்லாமல் இயற்கை நெறியில் வாழ வேண்டும் என்றும் அவர் கூறிய கருத்துக்களைப் பலர் ஏற்பதில்லை. ஆயினும் இத்தனை வேற்றுமை யுடையவர் களையும் பொதுநலம் கருதிப் பிணித்துச் சேர்க்கும் ஆற்றல் அவரிடம் இருந்தது.

இந்த நூற்றாண்டில் போலி நாகரிகம் மூலைமுடுக் கெல்லாம் பரவியிருந்தும், எளிய வாழ்க்கையையே அவர் மேற்கொண்டிருந்தார்; பழைய கொள்கைகளைக் கண் மூடிப் பின்பற்றுவோர் ஒரு பக்கமும், புதிய பழக்கங்களைக் கண்மூடி மேற்கொள்வோர் மற்றொரு பக்கமுமாக அல்லல் படும் இந்த நூற்றாண்டில், எந்தத் துறையிலும் எண்ணி எண்ணிப் பார்த்துத் தமக்கென்று தனி வழி வகுத்து

வாழ்க்கை நடத்தத் துணிந்தார். அணுக்குண்டு முதலியவற்றின் ஆற்றலைக் கண்டு உலகம் வியந்து நிற்கும் இந்த நூற்றாண்டில் அஹிம்சையின் ஆற்றலையும் உண்மையின் உயர்வையுமே எங்கும் பேசிப் புகழ்ந்தும் நம்பிக் கடைப்பிடித்தும் வாழ்க்கை நடத்தினார். ஆகையால் இவரிடம் மற்றவர்கள் கருத்துவேற்றுமை காண்பதும் எளிது; இவர் மற்றவர்களிடம் கருத்துவேற்றுமை காண்பதும் எளிது; ஆனால் இவரால்தான் கோடிக் கணக்கான மக்களையும் நூற்றுக்கணக்கான அறிஞர்களையும் தொண்டர்களையும் தலைவர்களையும் ஒன்று சேர்க்க முடிந்தது. இதற்குக் காரணம் கருத்து வேறுபாடுகளைப் புறக்கணிக்கும் அளவுக்குப் பொதுநலத் தொண்டும் பரந்த நோக்கமும் தூய அன்புமாக அவருடைய வாழ்க்கைமலர் பரப்பிய நறுமணமே ஆகும்.

எதையும் செயலில், தொண்டில், வாழ்க்கையில் வைத்து அளந்து பார்க்கும் ஒருவர் ஆழ்ந்த எண்ணத்தினராக இருப்பது எளிது. ஆனால் கள்ளம் கபடு அற்ற நகைச்சுவையாளராக விளங்குவது அரிது. ஆழ்ந்த எண்ணமும் இன்ப நகைச்சுவையும் அவருடைய வாழ்க்கையில் ஒருங்கே விளங்கியது பெருஞ் சிறப்பே ஆகும். அவருடைய பொக்கைவாய்ப் புன்முறுவலை உலகத்தில் உள்ள படங்களிலெல்லாம் காணலாம். குழந்தைகளின் சூழலில் அவருடைய கொல்லென்ற சிரிப்பே மிகுந்திருந்தது. தொழுகைக் கூட்டமும் தொண்டு பற்றிய கூட்டமும் தவிர, மற்றத் தனிப் பேச்சுக்களிலும் அவர் இடையிடையே சிரித்தலும் சிரிக்க வைத்தலும் இயல்பாகக் கொண்டிருந்தார்.

இங்கிலாந்து சென்றிருந்தபோது, ஆங்கிலேயருடைய நடனக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. அதற்கு வருமாறும், வந்து நடனக் கூட்டத்தில் கலந்து கொள்ளு

மாறும் அவரை அணுகிக் கேட்டார்கள். அவர் உடனே சிரித்து, "அதற்கென்ன தடை? அப்படியே ஆகட்டும். ஆனால் ஒன்று; நான் நடனமாடுவதானால் எனக்குக் கூட்டாளியாக நடிக்க வேண்டியவர் இவரே" என்று சொல்லித் தம் கையில் இருந்த தடியைச் சுட்டிக் காட்டினாராம். அங்கிருந்த ஒவ்வொருவரும் கொல்லெனச் சிரித்தார்களாம். இது அவருடைய நகைச்சுவைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். அவருடைய உள்ளத் தூய்மையே இத்தகைய நகைச்சுவையில் புலனாகிவந்தது.

## பேச்சும் எழுத்தும்

அவர் பேசுவது குறைவு; எழுதுவதும் குறைவே. பேசுவதை வாரத்தில் ஒரு நாள் அடியோடு விட்டு மௌன நோன்பு கைக்கொண்டவர் அவர். காரணமில்லாமல் அவர் எழுதியதும் இல்லை; பேசியதும் இல்லை. ஏதாவது ஒரு நற்செயலுக்குத் தூண்டுகோலாக இருந்தால்தான் அவர் எழுதுவதையும் பேசுவதையும் மேற்கொண்டார்; மற்றக் காலம் எல்லாம் செயலிலேயே கழித்துவந்தார். எழுத்தையும பேச்சையும் விடச் செயலே ஆற்றல் மிகுந்தது என்பது அவர் நம்பிக்கை. அவர் வாழ்நாளில் அலங்காரத்திற்காக எழுதிய எழுத்தும் இல்லை; ஆரவாரமாகப் பேசிய பேச்சும் இல்லை. செய்த செயல்களிலோ பிறர்க்குப் பயன்படும் தொண்டே விளங்கியது; வெறும் பகட்டுக்கோ புகழுக்கோ செலவழித்த காலமே இருந்ததில்லை.

எழுத்து, பேச்சு இந்த இரண்டையும் விடச் செயலையே தொண்டுநெறியாகக் கொள்ளவேண்டும் என்று அவர் வற்புறுத்திவந்தார். தம் வாழ்க்கையிலும் அவர் பலவற்றைத் திறம்படச் செய்தார்; சிலவற்றையே எளிய சொற்களில் சொன்னார்; சிலவற்றையே எளிய

நடையில் எழுதினர். "இப்போது உள்ளபடி அச்சுப் பொறிகள் பரவாத பழங்காலத்தில், சொற்பொழிவுகள் பெருகாத பழங்காலத்தில், இன்றுபோல் ஆயிரம் மைல் தொலைவை ஒருவர் ஒரு நாளில் கடந்து போகக்கூடிய கருவிகள் இல்லாமல் இருபத்துநான்கு மைல் ஒரு நாளில் நடப்பதே அரிதாக இருந்த பழங்காலத்தில், நோக்கங்களைப் பரப்புவதற்கு ஒரே ஒரு வழிதான் இருந்தது; அதுதான் செயல்—தொண்டு; செயலுக்கு அளவற்ற ஆற்றல் இருந்தது. இப்போது காற்றைப் போல் விரைந்துபோகிறோம், வருகிறோம், சொற்பொழிவு களைப் பொழிகிறோம், செய்தித்தாள்களுக்குக் கட்டுரை கள் தீட்டுகிறோம்; ஆயினும் நம் செயல்வகையில் குறை இருக்கிறது; சோர்வு அளவுக்கு மீறி ஏற்படுகிறது. என் கருத்து வேறு: எத்தனையோ பேச்சுக்களையும் எழுத் துக்களையும் விடப் பழங்காலம் போல் பொதுமக்களைக் கவரும் ஆற்றல் செயலில் மிகுதியாக இருக்கிறது." இவ்வாறு நம்பி வாழ்ந்தவருடைய பேச்சைக் கேட்கவே எந்த மூலை முடுக்கிலும் மக்கள் நூறாயிரக் கணக்காகத் திரண்டார்கள் என்பதை மறக்கமுடியாது; இவர் சிறந்த பத்திரிகை ஆசிரியராக விளங்கிச் செய்துவந்த எழுத்துத் தொண்டையே உலகமெல்லாம் ஏற்றுப் போற்றியது என்பதையும் மறக்கமுடியாது.

## செயல் வீரர்

எண்ணியதைச் சொல்லி, சொல்லியதைச் செயலில் காட்டிய பெரிய வீரர் அவர். மற்றவர்களிடமும் அவர் இதையே எதிர்பார்த்தார். அரசியல் அதிகாரிகளுக்கும் சாதித் தலைவர்களுக்கும் சமயத் தலைவர்களுக்கும் அடங்கி உள்ளத்தில் உணர்ந்ததை வெளியிடாமல் மறைக்கும் அச்சம் கூடாது என்று அவர் கடிந்துவந்தார். 1916 - ம்

ஆண்டில் கராச்சியில் ஒரு கூட்டத்தில், இந்த அச்சம் மக்களிடம் இருக்கும் வரையில் நாடு முன்னேறாது என்று எடுத்துரைத்தார். அவரைப் பொறுத்தவரையில் அவர் அஞ்சாமையே வடிவாக வாழ்ந்தார். அரசியல் அதிகாரிகளுக்கு அஞ்சுவதும் அடங்குவதும் அவருக்குத் தெரியாத வழக்கங்கள். தீண்டாமை முதலியவற்றைக் கடிந்து பேசியபோதெல்லாம், அவர் எந்தச் சமயத் தலைவர்களுக்கும் சாதித் தலைவர்களுக்கும் அஞ்சி அடங்கவில்லை. தன்னைப் பின்பற்றுகின்றவர்களிடமும் தன் குறைகளை எடுத்துச் சொல்லவும் கூசவில்லை. தன் கருத்தை மாற்றிக் கொண்ட காலங்களிலும், மாற்றிக்கொண்ட நேரத்திலேயே மற்றவர்களிடம் வெளியிட்டார். பலருடைய வெறுப்புக்கும் பகைக்கும் ஆளாக வேண்டுமே என்று அவர் எப்போதும் தயங்கியதே இல்லை. ஆனால் அவருடைய எண்ணத்திலும் பேச்சிலும் ஒருவரைப் பற்றியும் பழிப்பும் வெறுப்பும் காணமுடியாது. அமைப்பை மாற்ற வேண்டும் என்று எண்ணினாரே அல்லாமல், ஆட்களை ஒழிக்க எண்ணவில்லை. ஆகையால் அமைப்புகளின் குறையை எடுத்துப் பேசினாரே அல்லாமல், ஆட்களைப் பழித்தும் தாக்கியும் ஒருபோதும் பேசவில்லை. இவ்வளவு தூய்மையாக அவர் வாழ முடிந்த காரணம், அவருடைய எண்ணத்தின் தூய்மையே ஆகும். எண்ணத்திலோ, செயலிலோ சிறு குறை இருந்தாலும் அதை நினைந்து இரங்கித் திருத்திக்கொள்வதே முதல் கடமையாகக் கொண்டிருந்தார்.

கூடியவரையில் நூற்றுக்கு நூறும் சுதேசிப் பொருள்களைக் கொண்டே வாழ்க்கை நடத்த வேண்டும் என்பது அவர் குறிக்கோள். ஆனால் ஒரு காலத்தில் நாட்டுச் சவரக் கத்தி கிடைக்காமையால், வெளிநாட்டுக் கத்தியைக் கையாள வேண்டி யிருந்தது. இதைத் தவறு என்றும் குறை என்றும் உணர்ந்த அவருடைய

மனம் அமைதியுறவில்லை. வேறு வழி இல்லாதபடியால் செய்த தவறு என்றும், தம்மை யாரும் பின்பற்றக் கூடாது என்றும் வெளிப்படையாகத் தெரிவித்தார்.

இதையே அவர் பிறரிடமும் எதிர்பார்த்தார். நம்பியது ஒன்றும் செய்வது ஒன்றுமாக இருப்பதை அவர் கடிந்தார். ஆனால் ஒன்றில் நம்பிக்கை கொள்ளாமல் வேறு வழியில் வாழ்கின்றவர்களை அவர் குறைகூறியதில்லை. எடுத்துக் காட்டாக, கதரில் நம்பிக்கை இல்லாதவர்களை அவர் வெறுக்கவில்லை ; ஆனால் கதரில் நம்பிக்கை இருந்தும் அதைப் போற்றாமலும் நூல் நூற்றல் முதலிய கடமைகளைச் செய்யாமலும் வாழ்கின்ற வாழ்க்கையை வன்மையாகக் கடிந்திருக்கின்றார்.

எளிய வாழ்க்கையில் நம்பிக்கை வைத்தவர்கள் வழுக்கி வீழ்ந்தாலும் அவர் இவ்வாறே திருத்த முயன்றார். இங்கிலாந்தில் பியாரிலால் சில விலை உயர்ந்த பொருள்களை வாங்கிவந்தபோது அண்ணல் அவரைக் கடிந்தார். "புதிய இடம் ஆகையால் எனக்குப் பழக்கமில்லாத குறையால் அப்படித் தவறினேன்" என்று செயலாளர் கூறியபோது, "ஏழைமக்களின் சார்பாக இருந்து வாங்கும்போது மறக்காமல் உணர்ந்திருக்கவேண்டும். ஏழைகளின் பிரதிநிதி என்றால் அவர்களுடைய அறக்காப்பாளன் அல்லவா? அறியாமையாக இருந்தாலும் கவனிப்புக் குறைவாக இருந்தாலும் அறக்காப்பாளன் அவ்வாறு நடப்பது பெருங் குற்றம் அல்லவா?" என்று எடுத்துரைத்தார். இவ்வாறு நம்பிக்கை கொண்டவர்கள் தவறு செய்தால் அவர்களைக் கடுமையாகக் கடிந்து திருத்திவந்தார்.

வெறும் பேச்சையும் வெறுங் கூட்டத்தையும் வீண் உணர்ச்சியையும் வீண் ஆரவாரத்தையும் அவர் வெறுத்து வந்தார். கூட்டம் கூடிக் கைதட்டி ஆரவாரம் செய்து மகிழ்வதனால், உண்மைநெறி தவற நேரும் என்று

அவர் எண்ணினார். 1946 - ம் ஆண்டில் அவர் தென்னிந்தியாவிற்கு இறுதியாக வந்திருந்தபோது, மதுரையில் கூடிய மக்களின் அளவற்ற ஆரவாரத்தையும் வெறி பிடித்த அன்பையும் கண்டார். ஆனால் அவற்றை அவர் விரும்பவில்லை. "இத்தகைய வரம்பு கடந்த பற்றும் ஒழுங்கு மீறிய ஆர்வமும் உண்மையான அன்பு அல்ல" என்று அறிவுரை கூறினார்.

## மனத்தை ஆளுதல்

எதை ஆளும் உரிமை பெற்றால் வாழ்க்கை ஒழுங்கு படுமோ அதை ஆளக் கற்றவர் அவர். கோடிக்கணக்கான மக்களை ஆளும் உரிமை பெற்று விளங்குகின்ற நாட்டுத் தலைவனும் கவலைப்படுகின்றான்; அல்லலுறுகின்றான். ஆனால் மனத்தை ஆளும் தலைவராக விளங்க வல்லவர்க்கு வாழ்க்கையில் இடர்ப்பாடே இல்லை. ஆகையால் காந்தியடிகள் தம் மனத்தைத் தூய்மைப்படுத்துவதில் மிக விழிப்பாக இருந்து ஆட்சி புரிந்தார். வெளியுலகத் தூய்மையில் அவருக்கு இருந்த ஆர்வத்தை விட இந்த ஆர்வமே மிகுதியாக இருந்தது. "வெளியே பகை உள்ளது என்றும் அதை எதிர்த்துப் போர் செய்யவேண்டும் என்றும எண்ணுவது கூடாது. தனக்குள் இருக்கும் பகையைப் போக்க முயல வேண்டும். இந்தப் பகையைப் புறக்கணிக்கக் கூடாது" என்று அவர் எழுதிய சொற்களுக்கு இலக்கியமாகவே அவர் வாழ்ந்த வாழ்க்கை அமைந்திருந்தது. மனத்தில் கெட்ட எண்ணங்களை வளர்த்துவிட்டு உடல்உணர்ச்சிகளை மட்டும் அடக்குவது பயன் தராது என்றும், மனம் அலையுமிடத்தில் சிறிது காலம் கழித்த பிறகாவது உடலும் அலையும் என்றும், ஆகையால் மனத்தைப் பண்படுத்துவது கடமை என்றும் எழுதியுள்ளார்.

நாள்தோறும் தவறாமல், காலம்தாழ்த்தாமல், குறித்த நேரத்தில் குறித்த கடமையை ஒழுங்காகச் செய்து முடிக்கும் வழக்கம் அவரிடம் இருந்தது. அவருடைய இடுப்பில் தொங்கிய கடிகாரம் காலம் காட்டத் தவறினாலும் அவர் கடமையை முடிக்கத் தவறியதில்லை. இவ்வளவு ஒழுங்காக அவர் தம் முதுமையிலும் வாழ்ந்து காட்டினார். இதற்குக் காரணம் என்ன ? அவர் மனம் போன போக்கெல்லாம் போகவில்லை. அவர் எண்ணி அமைத்த போக்கில் அவருடைய மனம் யந்திரம்போல் இயங்கியது. மனிதன் தன் வாழ்க்கையை யந்திரம்போல் நடத்த வேண்டும் என்று அனாசக்தியோகம் என்ற நூலில் விளக்கியுள்ளார்: "சூரியன், சந்திரன், பூமி முதலியவை ஓய்வு இல்லாமல் நெறி தவறாமல் இயங்குகின்றன. இதுவே கடவுளின் அமைப்பு. அவருடைய ஆட்சியில் ஒவ்வொன்றும் யந்திரம் போல வேலை செய்கின்றன. மனிதனும் இவ்வாறே அறிவின் துணைகொண்டு வகுத்து யந்திரம்போல் கடமைகளைச் செய்யவேண்டும். யந்திரத்தின் போக்கைப் புறக்கணித்துத் தன் விருப்பம்போல் செய்வதால் மனிதனுக்கு விளையும் பயன் என்ன ? யந்திரம் போல் கடமைகளை ஒழுங்காகச் செய்வதால் கவலையற்று வாழமுடியும்." இந்தக் கொள்கையால்தான் அவர் கடமைகளைத் தவறாமல் முடிப்பதற்கு மனத்தை நன்கு பழக்கி யிருந்தார்.

முதுமை நெருங்க நெருங்க ஓய்வில் வேட்கையும் சோர்வும் மிகுதியாவதே பொதுவாகப் பலரிடமும் காணப்படுவது. ஆனால் அண்ணலின் முதுமையோ ஓயாத உழைப்புக்கு ஆளானது. இரவும் பகலும் ஓய்ந்திருக்க நேரமில்லாமல் பலவகைத் தொண்டுகளில் அவருடைய முதுமை கழிந்தது. ஆயினும் எள்ளளவும் சோர்வு இல்லாமல் ஊக்கத்தோடு உழைத்தார். டால்ஸ்டாய் தமது ஐம்பதாம் வயதில் பைபிலை அதன் மூலமொழியிலேயே கற்கத்

தொடங்கினார். காந்தியடிகள் வங்காள மக்களுக்குத் தொண்டு செய்து சமயப் பூசலைப் போக்க முயன்ற எழுபத்தெட்டாம் வயதில் வங்காள மொழியைக் கற்க முனைந்தார். இறுதிநாள் வரையில் நாள் தவறாமல் இயன்ற வரைக்கும் சிறிது சிறிதாகக் கற்றுவந்தார். திருக்குறளைத் தமிழில் படித்து உணரவேண்டும் என்பதற்காகத் தமிழ் கற்கவும் வேட்கை கொண்டார். ஆனால் ஓயாத கடமைகளுக்கு இடையே அதற்கு நேரம் வாய்க்கவில்லை. தமிழ் எழுத்துக்களைக் கற்றுக்கொண்டதோடு, 'திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை' என்று தமிழ் எழுத்தில் எழுதக் கற்றதோடு, தம் பெயரைத் தமிழில் எழுதிக் கையெழுத்து இடும் அளவோடு நிற்க வேண்டியதாயிற்று. உள்ள நேரத்தை யெல்லாம் பிறர்க்கு நன்மையான உழைப்பில் செலவிட்ட அவர் இடையிடையே பல புதிய துறைகளிலும் முயற்சி செய்ய முடிந்தது. இதுவே வாழ்க்கையை நடத்துவதில் அவர் பெற்றிருந்த தலைமையை விளக்குகின்றது. தனி வாழ்க்கையில் பெரும்பாலோர் அடிமைகளாக இருக்கின்றார்கள்; மனமே அவர்களை ஆட்டி வைக்கும் கொடுங்கோலரசாக இருக்கின்றது; பலவகைத் தீய பழக்கங்களில் பயின்ற நாடி நரம்புகளே அந்தக் கொடுங்கோலாட்சிக்குத் தக்க படைகளாக இருக்கின்றன. அண்ணலின் வாழ்க்கையில் அவரே உரிமை பெற்ற தலைவர்; அவருடைய மனமோ செங்கோலுக்குத் துணையான அமைச்சாக விளங்கியது; அவருடைய தூய மெல்லிய உடலின் நாடி நரம்புகளோ மிக நல்ல தொண்டர்கள்போல் துணைசெய்தன.

### மனச்சான்று

தனிவாழ்க்கை ஆனாலும் பொது வாழ்க்கை ஆனாலும் மனப் பண்பாட்டைக் காத்து நடக்கவேண்டும் என்றும்,

வெறும் பேச்சிலும் உணர்ச்சியிலும் மகிழாமல் மனச் சான்றைப் போற்றி நடந்தால்தான், உள்ளும் புறமும் ஒத்த வாழ்க்கை நடத்த முடியும் என்றும் அவர் தெளி வித்தார். பெரும்பாலோர் எண்ணம் ஒன்றும் சொல் ஒன்றும் செயல் மற்றொன்றுமாக இருப்பதற்கு மனச் சான்று பண்படாமையே காரணம் ஆகும். அண்ணலோ இளமை முதல்கொண்டே மனச்சான்றை மதித்து நடந் தார். பிற்காலத்தில் அந்தத் தூய மனச்சான்று கூறு வதையே கடவுளின் ஆணை என மதித்து நடந்தார்.

இளமையில் நண்பர் ஒருவர் அவரை ஒரு விபசார வீட்டுக்கு அழைத்துச் சென்றார். அங்கே எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று வழி எல்லாம் கூறி உள்ளே அனுப்பினாராம். ஏற்பாடு முடிந்து பணமும் கொடுத்தாகி விட்டதாம். ஆனால் உள்ளே நுழைந்த காந்திக்குப் பார் வை மங்கிவிட்டதாம்; பேச நா எழவில்லையாம்; படுக்கை யருகே சென்று அங்கிருந்த ஒருத்தியின் பக்கத்தில் உட் கார்ந்தாராம். ஆனால் ஒன்றும் பேச முடியவில்லை. அவளோ பொறுமை இழந்தாள் ; திட்டினாள் ; வெளியே போகச் சொன்னாள்; ஆண்மைக்கே குறைவு வந்துவிட்ட தாக அப்போது அவர் எண்ணினாராம்; உடனே வெளி யேறித் தப்பினாராம். இதைப் பற்றித் தம் வரலாற்றில் எழுதும்போது, "பாவச் செயலில் தலைகீழாக விழ இருந் தேன்; இறைவன் தன் எல்லையற்ற அருளால் என்னைத் தடுத்து ஆட்கொண்டார்" என்று குறிப்பிட்டுள்ளார். இளமையிலேயே அவருடைய மனச்சான்று எவ்வாறு பண்பட்டிருந்தது என்பதை இந்த நிகழ்ச்சி நன்றாக விளக்குகின்றது. ஓயாமல் அரசியலில் உழைத்து வந்த முதுமையிலும் பிறர் செய்த தவறுகளை எல்லாம் தம்

பொறுப்பாக ஏற்றுக்கொண்டு பட்டினி கிடந்து தவம் செய்த அருஞ் செயல்கள், வளர்ந்த பிறகும் அந்த மனச் சான்று அவரை எவ்வாறு இயக்கிவந்தது என்பதைக் காட்டுகின்றன இத்தகைய மனச்சான்று இருந்த காரணத்தால்தான், உள்ளத்தில் உணர்ந்ததையே பேசி, பேசியதை எல்லாம் செயல்படுத்தும் பெருமை அவருக்கு இயல்பாக அமைந்திருந்தது.

# 5

# அடிப்படை

## கற்றநெறியில் நிற்றல்

உயர்ந்த நூல்களைக் கற்றவர்கள் வெவ்வேறு வகையில் பயன்படுத்துகின்றார்கள். சிலர், உண்மைகளை நூல் கூறுகின்றது என்று நம்பாமல், பிறர்க்கு எடுத்துச் சொல்லிக் காலம் கழிக்கவும் அவர்களுடைய போற்றுதலைப் பெறவும் பயன்படுத்துகின்றார்கள். இதைச் சொற்பொழிவு வாணிகம் என்று கூறலாம். இன்னும் சிலர், உயர்ந்த நூல்கள் உண்மைகளையே கூறுகின்றன என்று நம்பியும், தம்மைப் போன்றவர்களால் அவ்வாறு வாழமுடியாது என்று விடுகின்றார்கள். இவர்களுடைய நம்பிக்கையும் உறுதியானது அல்ல; இவர்களுடைய வாழ்க்கைப் போக்கும் உரிமை உடையது அல்ல. இவர்கள் நிலைமையை எண்ணிப்பார்த்தால், சுற்றுப்புறத்துக்கும் நாடி நரம்புகளுக்கும் இவர்கள் அடிமைகளாக இருப்பதையும் ஆசையின் வழியில் இவர்கள் ஆடுவதையும் காணலாம். இன்னும் சிலர், உயர்ந்த நூல்களைப் படித்துவிட்டு, இயன்றவரையில் கடைப்பிடிக்கலாம் என்று முயல்கின்றார்கள். இதுவே நல்வாழ்க்கையின் முதல்படி என்று கூறலாம். ஆனால் "இயன்ற வரையில்" என்ற சொல்லையும் காந்தி வெறுத்தார். ஆசிரமத்தார்க்கு எழுதிய கடிதம் ஒன்றில், "இயன்ற வரையில் இதைச் செய்வேன் என்று சொல்கிறவன் தன் செருக்கை வெளிப்படுத்துகிறான்; அல்லது தன் ஆற்றலின்மையைக்

காட்டுகிறான். இயன்ற வரையில் என்ற விதி வழுக்கி விழுவதற்கே துணை செய்யும். என்னைப் பொறுத்த வரையிலும் சரி, பிறர் வாழ்க்கையிலும் சரி, இவ்வாறு நடப்பதைக் கண்டிருக்கிறேன். இயன்ற வரையில் இந்தத் தொகையை இன்ன நாளில் கொடுப்பேன் என்று பாண்டு எழுதினால் செல்லுபடி ஆகுமா? அதை யாராவது ஏற்பார்களா?" என்று தம் கொள்கையையும் வழியையும் விளக்கியுள்ளார். அவருடைய வாழ்க்கையில் "இயன்ற வரையில்" என்பது இல்லை. நூல்களைப் படிப்பார்; உண்மை உண்மையல்ல என்று பகுத்தறிய முற்படுவார்; தெளிவார்; தெளிந்த பிறகு நம்பிக்கைதான்; நம்பியவை எல்லாம் செயலாகும். ஆகவே, உயர்ந்த நூல்களின் கருத்துக்கள் எல்லாம் அவர்வாழ்வில் காணப்பட்டன. நூல்களைப் பிறர்க்குக் கூறுவதற்கு என்றும், நம்பிக்கைக்கு என்றும், இயன்றவரைக்கும் முயல்வதற்கு என்றும் கற்காமல், நூல்களை வாழ்ந்து போற்றவே பயன் படுத்தினார் நூல் அவருக்கு வாழ்க்கை ஆயிற்று என்று சுருங்கச் சொல்லலாம்.

இத்தகைய உயர்ந்த நோக்கம் கொண்டு சிறந்த நூல் களைக் கற்க முயன்ற காரணத்தால், சொல்தோறும் சுவையும் நயமும் காண்பதிலும், தருக்க முறையில் கற்று வாதம் செய்வதிலும் அவர் வேட்கை கொள்ளவில்லை. பகவத் கீதையை விளக்கி அவர் எழுதியுள்ள 'அனாசக்தி யோகம்' என்ற நூலின் முகவுரையில் உள்ள சில வாக்கியங்கள் இந்த உண்மையை விளக்கும் :—

"கீதையில் உள்ள உண்மைக் கருத்துகளை வாழ்க்கையில் நடத்திக் காட்ட நானும் என் நண்பர்களும் முயன்றுவருகின்றோம். எங்களுக்குக் கீதை ஆத்ம வளர்ச்சியின் முடிவான நோக்கங்களைக் காட்டும் நூல். அதைக் கடைப்பிடித்து நடக்கும் முயற்சியில் அடிக்கடி தோல்வி அடைகிறோம். ஆனாலும், முயற்சியில் தளர்வு

தில்லை. தோல்விக்கு இடையே சில வேளைகளில் வெற்றியின் சுடரொளியும் தோன்றுகின்றது."

"கீதையை முதல் முதலில் நான் கற்றபோது, அது ஒரு வரலாற்று நூல் அல்ல என்றும், உலகப் போரை வைத்துக்கொண்டு ஒவ்வொருவர் உள்ளத்திலும் இடையறாமல் நடந்துவரும் அறப்போரை விளக்கும் நூல் என்றும் எனக்குத் தோன்றியது. இந்த அறப்போரை நன்றாக விளக்குவதற்காக உலகப்போர் ஒன்று கதையாகப் புனையப் பட்டிருக்கிறது. இந்த எண்ணமே ஆழ்ந்து கற்ற பிறகு உறுதியடைந்தது. பாரதத்தைப் படித்தபோது இது மேலும் உறுதியாயிற்று. மகாபாரதம் மற்ற நாட்டு வரலாறுகள் போன்ற ஒன்று என்று நான் கொள்ளவில்லை."

"கீதையின் சொற்களைக் கொண்டு மட்டும் பார்த்தால், ஆசையின்றிப் பயன் துறந்த பிறகும் ஒருவர் போர் செய்யக்கூடும் என்று ஒருகால் தோன்றலாம். ஆனால் கீதையின் அறவுரையை நாற்பது ஆண்டுகளாக என் வாழ்க்கையில் நடத்திக் காட்டச் செய்துவருகின்ற முயற்சிகளின் பயனாக நான் உணர்வது வேறு; உண்மையையும் இன்னாசெய்யாமையையும் முற்றிலும் போற்றி நடக்காத வரையில் பற்றின்றிப் பணிசெய்தல் என்பது முடியாது என்று வணக்கத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன்."

"கீதை வெறும் மூளையால் அறியக் கூடியது அல்ல; இதயத்தால் உணர வேண்டிய நூல் ஆகும்."

## சமய உணர்வு

அறநெறியே நோக்கமாகக் கொண்டு போற்றியவராகையால், அவர் அறமும் சமயமும் ஒன்றாகவே உணர்ந்தார். அறத்திற்கு மாறானவை - உண்மைக்கும் அன்புக்கும் முரணானவை - சமயம் அல்ல என்றும் உணர்ந்தார். "தீயவர்கள் பல தீமைகளைச் செய்துகொண்டே தாம் மிகவும் சமயப்பற்று உள்ளவர்கள் என்று பெருமை பாராட்டிக்கொள்கிறார்கள். பிராட்லா போன்ற சிலர் மிக நல்லவர்களாகவும் அறவோராகவும் வாழ்ந்தும்,

தம்மை நாத்திகர் என்றே சொல்லிக்கொண்டார்கள். இந்த இரண்டு கருத்தும் பொருந்தாதவைகளே. ஆனால், முன் சொன்னவர்கள் தம் தீமைகளைச் சமயப் போர்வையால் மறைத்துவிடுகின்றார்கள். ஆகையால் மக்கள் வாழ்க்கைக்கு அவர்கள் இடையூறானவர்கள். சமயமும் அறநெறியும் எப்போதும் கைகோத்துக் கொண்டே செல்ல வேண்டும்'' என்ற சொற்களில் இதைத் தெளிவுபடுத்தியுள்ளார். ''உண்மையான சமயம் அறநெறியே. உண்மையையும் அறத்தையும் விடப் பெரிய சமயம் ஒன்றும் இல்லை. கடவுளின் பெயரைச் சொல்லிக்கொண்டே பாவச் செயல்கள் செய்தால், அவருடைய அருளுக்கு உரியவர்களாக ஆக முடியுமா ? ஒருவர் கடவுள் இருப்பதாக உடன்பட்டுப் பொய்யும் தீமையும் கலந்த வாழ்க்கை நடத்துகிறார்; மற்றொருவர் அவரைப் பற்றி அறியாமல், உண்மையும் அறமும் நிறைந்த வாழ்க்கை நடத்துகிறார் என்று வைத்துக்கொள்வோம். இந்த இருவகையில் எவர் சமயப்பற்றும் அறநெறியும் உடையவர் ? கடவுளுக்கு வாய்வழிபாடு மட்டும் செய்கிறவர் நாத்திகரைவிடப் பிற்போக்கானவர். மற்றவர் கடவுளின் ஆணைப்படி நடப்பவர் ஆகையால், அவரே சிறந்த கடவுளன்பராகக் கருத வேண்டும். ஆகையால் சமயம் என்பதும் அறநெறி என்பதும் ஒன்றே'' என்ற மணிமொழிகளில் அவர் மேலும் தெளிவாக்கியுள்ளார்.

சமய வெறி என்பது அவருடைய வாழ்க்கையில் தலைகாட்டியதே இல்லை. சமய உணர்வு வளர வளர சமய வெறி தேயும் என்பதற்கும், தொண்டு பெருகப் பெருக உண்மைச் சமய நெறி விளங்கும் என்பதற்கும் அவருடைய வாழ்க்கை சிறந்த எடுத்துக்காட்டாக இருக்கின்றது. உலக முழுவதும் ஒரு குடும்பமாகக் காண்பதே அவருடைய நெறி. ''உலகில் எல்லாரும் இன்பமாக

அமைதியாக வாழ வேண்டும் என்பதுதான் என் மதம்'' என்று சொல்லிய அவருடைய சொல்,

எல்லோரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே

என்ற தாயுமானுரின் கருத்தையே கூறுவதாக உள்ளது. நாட்டுப்பற்றை இந்தியாவில் கோடிக்கணக்கான மக்களுக்கு ஊட்டிய அவர், ''உலக நன்மைக்கு இடையூருக இந்தியா வாள்வலியைப் போற்றிஞல், நான் இந்தியாவையும் எதிர்த்து நிற்க முன்வருவேன்'' என்ருர். சுதேசிய உணர்ச்சியை நாடெங்கும் பரப்பி வெற்றி பெற்ற அவரே, ''சுதேசித் தொண்டன் அயலானிடம் கெட்ட எண்ணம் கொள்ளலாகாது. உலகில் ஒருவரையும் பகைத்துக்கொள்ளக் கூடாது. சுதேசியம வெறுப்பால் பிறப்பது அல்ல; தன்னலம் நீங்கிய தொண்டும் அன்புமே அதற்கு அடிப்படை'' என்று கூறிஞர். இவை மட்டும் அல்ல; உலகத்தைக் குடும்பமாகக் காணும் அன்பு நெஞ்சத்தால் அவர் திருமணத்தையும் ஓரளவு ஒதுக்கிக் கூறியுள்ளார்; ''உண்மையான கணவன் மனைவிக்காகத் தியாகம் செய்யவேண்டும். உண்மையான மனைவியும் அவ்வாறே கணவனுக்காகத் தியாகம் செய்யவேண்டும். அவ்வாறு இருவரும் வாழ்வார்களாஞல், தம் அன்புக்கு எல்லைச் சுவர் வைத்ததுபோல் ஆகின்றதே. மற்றவர்களிடம் அன்பு செலுத்துவது எவ்வாறு? குடும்ப அன்பு வளர வளர, உலக அன்பு குறைகின்றதே. ஆகையால் இதை உணர்ந்தவன் திருமணம் செய்துகொள்வதற்கும் இடம் இல்லை'' என்று உலகத் தொண்டையே பெருமைப் படுத்தியுள்ளார்.

பணம் பெற்று வாழ்க்கை நடத்தவேண்டியிருந்த காலத்திலும்—அதாவது, வக்கீல் வேலை செய்து கட்சிக்

காரரைத் திரட்டவேண்டிய நிலை இருந்த காலத்திலும்— அவர் தன்னலத்தோடு நடந்துகொள்ள முடியவில்லை. தன்னைப் போல் பிறரையும் போற்றுகின்ற உண்மைச் சமய உணர்வு இருந்தபடியால், அவர் அப்போதும் வழக்கு களைப் பெருக்கிப் பணம் சேர்க்கும் மனமில்லாமல், கடமையை உணர்ந்து செய்தார். கட்சிக்காரரைப் பிரித்து இல்லாத பகையையும் வளர்த்துத் தூண்டிவிடுவதே வக்கீல் களின் கடமை என்று இருந்த காலத்தில், எதிர்வக்கீ லுக்கும் சொல்லி எதிர்கட்சியாரையும் அழைத்து, இரு சாராரையும் ஒத்துப்போகுமாறு வேண்டிக்கொள்வதி லேயே காலம் கழித்தார். பலர் பலவாறு எண்ணினாலும், தம் வருவாய் குறைந்துபோனாலும், அதுவே உண்மையான வக்கீல் வேலை என்று உணர்ந்தார். சமயத்தின் பெயரால் மற்றவர்கள் தன்னலத்தை வளர்க்க, காந்தியடிகள் செய்யும் தொழிலிலும் சமய உணர்வால் தன்னலத்தைத் துறந்து வாழ்ந்தார்.

ஒறுத்தல் - தண்டித்தல் - என்பதில் அவர் நம்பிக்கை கொள்ளாததற்கும் சமய உணர்வே காரணம். திருடர் களைத் தண்டிப்பதால் பயனில்லை என்றும், பொறுமை பூண்டு அன்பு காட்டித் திருத்துவது நல்லது என்றும் அவர் எழுதும் இடத்தில், " நாம் தண்டித்தவுடன் அந்த நேரத்தில் திருடர்கள் அடங்குகிறார்கள். ஆனால் பிறகு மற்றொருவர் வீட்டில் திருடப் பார்க்கிறார்கள். இந்த மற்றொருவர் யார்? நாமே அன்றி வேறு அல்ல " என்று எழுதியுள்ளார். மற்றொருவரும் நாமே என்றும், நாம் மட்டும் திருட்டுக்கு ஆளாகாமல் தப்பித்துக்கொள்வதால் பயனில்லை என்றும், மற்றவர்களிடத்திலும திருடாமல் காக்கவேண்டும் என்றும் எண்ணும் எண்ணங்கள் எளி தில் தோன்றக்கூடிய எண்ணங்கள் அல்ல. -உண்மை யாகவே உலகமெல்லாம் ஒரு குடும்பமாகக் கருதும்

உயர்ந்த கருத்திலிருந்தே பிறக்கக் கூடிய எண்ணங்கள் இவை.

பிறருக்கு ஏன் தொண்டு செய்யவேண்டும் என்று நீதி தர்மத்தில் முடிவுரையாக விளக்கும்போதும் இந்த உண்மைச் சமய நெறியை விளக்கியுள்ளார். "தன்னலம் அற்ற தொண்டைப் பிறருக்காகச் செய்வதே மனிதனுடைய கடமை. அப்படித் தொண்டு செய்வதால் பிறருக்கு நன்மை உண்டாகும் என்பதற்காகவும் உதவி செய்ய எண்ணக்கூடாது. பிறர்க்குத் தொண்டு செய்வதே தன் உயிர்வாழ்க்கைக்கு அடிப்படை என்று எண்ணவேண்டும்" என்ற பொன்மொழிகளால் மீண்டும் உலகத்தை ஒரு குடும்பமாக - ஒரு வாழ்க்கையாக - உணரும் சமய உணர்வைப் புலப்படுத்தியுள்ளார்.

இப்படி உலகக் குடும்பத்தில் கலந்து கரைந்துபோக எண்ணிய உயர்ந்த நெஞ்சம் தனக்கென்று பெருமையும் புகழும் நாட இடம் உண்டா? அதனுல்தான் அவர் தம்மை மற்றவர்களைவிட எவ்வகையிலும் உயர்வாகக் கருதாமல் படைப்பில் உள்ள உயிர்களில் ஒன்ருக எண்ணிக்கொண்டார். "எனக்கு மட்டும் சிறப்பாகக் கடவுள் ஒன்றும் அருளவில்லை. ஒவ்வொருவருக்கும் கடவுளின் அருள் உண்டு. நான் சாதாரண தொழிலாளி; இந்தியர்களின் தொண்டன்; உலக மக்களுக்கு உழைக்கும் வேலையாள். உண்மை என்று எனக்குத் தோன்றுவதை மதித்து வாழ விரும்புகிறேன். தொன்றுதொட்டு விளங்கிவரும் அறநெறியையே விளக்கிக் காட்டுகிறேன். இவ்வளவுதான் என்னிடம் காண்பது" என்று தாம் உணர்ந்ததை விளக்கியுள்ளார்.

அண்ணலின் நல்லுடல் குண்டுக்கு இரையாவதற்கு முந்தியநாள் மாலையில் டில்லியில் அகதிகளில் ஒருவர் அவரை நோக்கி, "உங்களால்தான் எங்களுக்கு இந்தத்

துன்பமெல்லாம் நேர்ந்தது. நீங்கள் இமயமலைக்குப் போய்த் தனித்திருப்பது நல்லது" என்று சினத்தோடு கூறினார். அண்ணல் அதைப் பொறுமையோடு கேட்டு, "இமயமலைக்குப் போய்ப் பெறக்கூடிய அமைதியைப் பற்றி எனக்குக் கவலையே இல்லை. இங்கே சூழ்ந்துள்ள குழப்பத்திற்கிடையே ஒரு சிறு அமைதி கிடைத்தால் அதுவே எனக்கு வேண்டும். ஆகையால் நான் உங்களிடையே தான் இருக்க விரும்புகின்றேன். ஒரு வேளை, நீங்கள் எல்லோரும் இமயமலைக்குப் போவதானால், அப்போது உங்களோடு உங்கள் தொண்டனாக வருவேன்" என்று அன்போடு மறுமொழி கூறினார். இதிலிருந்தே அவர் செய்துவந்த தவமும் அதற்குக் காரணமான உணர்வும் இப்படிப்பட்டவை என்று விளங்கும்.

## சமயமும் அரசியலும்

சமய உணர்வே அவரை அரசியலில் கொண்டுவந்து சேர்த்தது. தம் சத்திய சோதனையின் முடிவில், "உலகமெல்லாம் பரவிக் கலந்து நிற்கும் மெய்ப்பொருளைக் காண விரும்புகின்றவன், படைப்பில் தாழ்ந்த நிலையில் உள்ள உயிரையும் தன்னைப் போல அன்புடன் போற்றும் ஆற்றல் பெறவேண்டும். வாழ்க்கையில் எந்தத் துறையிலிருந்தும் அவன் விலகி வாழ முடியாது. மெய்ப்பொருளிடத்தில் இருக்கும் பற்றே என்னை அரசியலுக்கு அழைத்து வந்தது. சமயத்துக்கும் அரசியலுக்கும் தொடர்பு இல்லை என்று கருதுவது பொருந்தாது என்றும், அப்படிக் கருதுகின்றவர்களுக்குச் சமயத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது என்றும் நான் பணிவோடு கூறுகின்றேன்" என்று அவர் இந்தக் கொள்கையைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

தனி வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை, நாட்டுத் தொண்டு, உலகத் தொண்டு, சமயநெறி இவை எல்லாம்

ஒத்துப்போக முடியாது என்றும், ஒவ்வொன்றும் மற்ற வற்றிற்கு இடையூறே என்றும் பெரும்பாலோர் எண்ணி வந்திருக்கின்றனர்கள். தாம் எண்ணியபடி வாழவேண்டு மானால், குடும்பம் நடத்த முடியாது என்று தயங்குவோர் பலர் ; குடும்ப நன்மைக்காகத் தம் வாழ்க்கையை மாற்றிக் கொள்ளவேண்டும் என்று தளர்வோர் பலர் ; குடும்ப வாழ்க்கைக்கு நாட்டுத்தொண்டு - அரசியல் தொண்டு - இடையூறானது என்று ஒதுங்குவோர் பலர் ; நாட்டுத் தொண்டைக் கருதிக் குடும்பக் கடமைகளை கைவிடுவோர் பலர் ; நாட்டுப்பற்று உலக நோக்கத்திற்கு உதவாதது என்று துறப்போர் பலர் ; நாட்டு நன்மையை நாடுவதால் உலகத்தைப் பற்றிக் கவலை இல்லை என்று முனைவோர் பலர் ; உலக வாழ்க்கையில் மிகுதியாக ஈடுபட்டால் சமய உணர்வு குன்றும் என்று அஞ்சுவோர் பலர் ; சமயம் என்று வாழும் வாழ்க்கையால் பயன் இல்லை என்று உல கத்தையே பொருளாகக் கொள்வோர் பலர் ; அரசியலில் குதித்து அறநெறியையும் தனிக் கடமைகளையும் கைவிட் டவர் பலர் ; சமயப்பற்றும் உணர்வும் மிகுந்த காரணத் தால் மனைவி மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைத் துறந்தவர் பலர். காந்தியின் வாழ்க்கை அளவறிந்து வாழ்ந்து பண்பட்ட அறவாழக்கை ஆகையால், அவர் எதையும் கைவிடாமல் எல்லாவற்றையும் போற்ற முடி யும் என்று வாழ்ந்து காட்டினார். சமயம் என்பது தனிப் பட்ட ஒன்றாக அவருக்குத் தோன்றவில்லை ; தான், குடும் பம், நாடு, உலகம் எல்லாத் துறைகளிலும் செய்யும் கடமைகளிலும் அவர் சமய நெறியைக் கொண்டார். கடவுளே எல்லாம் என்றும், எல்லா மக்களும் ஓர் உயிரே என்றும் உணர்ந்த ஞானிக்கு வாழ்க்கைத் துறைகள் எல்லாம் சமயநெறியாகவே இருந்தன.

சமயத்தையும் அரசியலையும் அவர் பிணைத்துவைத்தே தொண்டு ஆற்றினார். இந்தியாவில் இன்னும் சமய உணர்ச்சி இருந்து வருகின்றது என்றும், தாய்நாட்டுக்குத் தொண்டு செய்வதே சமயத்தின் குறிக்கோள் என்று ஆண்களும் பெண்களும் சமயப் பற்றோடு உணர்வார்களானால் பொதுநலத் தொண்டில் பெருவாரியாக ஈடுபட்டுப் பெருந்தொண்டு செய்ய முடியும் என்றும் அவர் நம்பினார். 1917-ஆம் ஆண்டில் கூடிய குஜராத் அரசியல் மாநாட்டில் அவர் இந்தக் கருத்தைத் தெரிவித்தார். இறுதிவரையில் இந்த நம்பிக்கை பூண்டிருந்தார். ஆனால், மக்களுக்குத் தொண்டு செய்வதே உண்மையான சமய நெறி என்பது அவர் உறுதியாகக் கொண்ட கொள்கை. பொதுமக்களின் சமய உணர்ச்சியில் அந்தக் கொள்கை வேரூன்றாமல், பாவம் மலிந்த உலகத்திலிருந்து தாம் மட்டும் தனியே பிரிந்து மோட்சம் பெறவேண்டும் என்ற தன்னலமும், தமக்கு வேண்டிய பொன்னும் பொருளும் கடவுளருளால் மிகுதியாகக் கிடைக்கும் என்ற ஆசையும் சமயப் போர்வையில் மறைந்து கிடப்பதால் சமய உணர்வு பெருகாமல் சமயவெறியே தலையெடுத்தது ; சமயத்தின் பெயரால் பூசலும் குழப்பமும் கொள்ளையும் கொலையும் மலிந்தன; அண்ணலின் வாழ்க்கைக்கும் ஊறு நேர்ந்தது.

பொதுமக்கள் முன்னேற வேண்டும், சீர்திருந்த வேண்டும் என்பதில் அவர் கொண்டிருந்த வேட்கைக்கெல்லாம் உண்மையான சமய உணர்வே காரணமாகும் இந்த வேட்கை அவர்க்கு என்றும் தணியாத வேட்கையாக இருந்தது. 1932-ல் தீண்டாமை ஒழிக்க உண்ணாநோன்பு கிடந்தபோது, ஒரு பத்திரிகையாளர் அவரை நோக்கி, "நீங்கள் பட்டினி கிடந்து வாடுவதால் கோடிக்கணக்கான மக்கள் நொந்து வருந்துகின்றார்களே" என்று கேட்டார். " ஆ ! கோடிக்கணக்கான மக்களுக்கு வேதனை தருவதே

இதன் நோக்கம். என்மேல் அன்பு கொண்டவர்கள் தம் அன்பைத் தெளிவாகவும் தடையில்லாமலும் புலப்படுத்துவார்களானால், தீண்டாமை ஒழியும்; நான் வாழ்வேன். இதுதான் நான் வாழ விரும்பும் நிலைமை. ஒன்று, நான் வாழத் தீண்டாமை ஒழியட்டும்; அல்லது தீண்டாமை இருக்கட்டும், நான் அழிவேன். இந்தப் போர்க்களத்தில் உள்ள போர் எனக்கும் தீண்டாமைக்குமே" என்று விடைகூறினார். பொதுமக்கள் உணரவேண்டும், உணர்ந்திருந்த வேண்டும் என்ற தீரா வேட்கையை இந்த மொழிகளில் காணலாம்.

## அடிப்படை எது ?

காந்தியின் வாழ்க்கை குறைகளுக்கு இடையே தொடங்கிக் குணங்கள் நிறைந்து வளர்ந்து பண்பட்ட வாழ்க்கையாகும். இளமையில் புலன்களின் அலைப்புக்கு இடையே கலங்கினார்; பிறகு புலன்களை வென்ற வீரராகத் திகழ்ந்தார். பிசாசு பாம்பு திருடர் இருள் முதலிய பல வகை அச்சங்கள் திருமணமான பிறகும் அவரை வருத்தி வந்தன; அவரே பிறகு அஞ்சாமையின் தனிவடிவாகக் குழப்பமும் கொலையும் மலிந்த பகுதிகளிலும் தொண்டு ஆற்றினார். நினைத்ததற்கெல்லாம் கசிந்தும் நெகிழ்ந்தும் உருகும் உணர்ச்சி மிக்கவராக இருந்தார்; பண்பட்ட பிறகு, அருமைத் துணைவியாரின் ஆவி பிரிந்த போதும் அசையாமல் கலங்காமல் நின்று ஓரிரு கண்ணீர்த் துளியோடு அமைதியுற்றுக் கடமை செய்யும் ஆற்றலுடன் வீரராக விளங்கினார். பேச உடன்பட்டு எழுந்து நின்ற முதல் கூட்டத்தில் நடுக்கமும் அச்சமுமாய்ப் பேச்சற்று நிற்கும் அளவிற்குத் திறனற்றவராய் இருந்தார்; அவரே உலகத்து வல்லரசுகளையும் கலக்க வல்ல சொற்கள் உடையவராய் வாழ்ந்தார். வழக்கறிஞராகத் தொழி

லேற்றபின் முதல்நாளில் வழக்காடும் தகுதியில்லை என்று பிறர் உணருமாறு அஞ்சித் தவறினர்; அவரே பிறகு உலகத்தில் உள்ள ஏழை எளியவர்கள் எல்லோருடைய குறைகளையும் எவர்க்கும் அஞ்சாமல் எடுத்துரைத்து மன்றாடும் அரசியல் தலைவரானர். பேசவேண்டும் என்று பெரு முயற்சி செய்தும் தொடக்கத்தில் தோல்வி பல உற்ற அவரே, பிறகு வாழ்க்கையில் பேச்சு வளரக்கூடாது என்று உணர்ந்ததோடு அல்லாமல், வாரம் ஒருநாள் பேசா நோன்பும் கொள்ளலானர். புறத்தில் மதிப்பு வேண்டும் என்று வாழ்க்கையைத் தொடங்கினர்; பிறகு புறத்தே மதிப்புத் தேடுவது அறியாமை என்று தெளிந்து அகத் தூய்மையே நாட்டமாகக் கொண்டார். போலி நாகரிகச் சூழலில் வளர்ந்து வெளியே வந்தார்; ஆனல் இயற்கையின் எளிமையில் இன்பம் கண்டு அதையே செல்வமாகக் கொண்டபின், அவருடைய இயற்கை வாழ்வையே உலகம் தனிப் பெருங் கலையாகக் கொண்டாடிப் போற்றிவருவதாயிற்று.

உயிர் எல்லாம் ஒன்று; இயற்கை எல்லாம் ஒன்று. இயற்கை என்பது உயிர் தாங்கிய உடல். உடல் பலவகை யாக வளர்ந்து வளர்ந்து பண்படுகின்றது. இதையே கூர்தல் அறம் (Evolution) என்பார்கள். அவ்வாறு அமைந்த உடல்களில் வெறுந் தசையும் என்பும் வலிமை பெற்ற உடல்களை விட, நகமும் பல்லும் கூர்மைபெற்ற உடல்கள் வெற்றி பெறறன. அவற்றைவிட மூளை சிறந்த உடல்கள் உயர்வு பெற்றன. அதனல் மக்கட் பிறப்பு ஓர் உயர்ந்த படியாகும். மக்கட் பிறப்பில் மூளை வளர்ந்தமைந்த பிறகும் இயற்கையின் முயற்சி நின்றுவிடவில்லை. அவ்வப்போது மூளையும் இதயமும் ஒருங்கே வளர்ந்து பண்பட்ட பிறவிகள் அமைகின்றன. இவைகளையே அறம் விளங்கும் பிறவிகள் எனலாம். மெய்ப்பொருள் ஒன்றே,

எல்லோரும் ஒன்றன் கூறுகளே என்னும் உண்மையையே அந்தப் பிறவிகள் அறிவுறுத்துகின்றன; மற்ற வேற்றுமைகள் அறியாமையால் விளைவன என்று தெளிவிக்கின்றன. காந்தியடிகளின் வாழ்வு இவ்வாறு அறம் வளர்ந்து அமைந்த வாழ்வு ஆகும்.

இத்தகைய வளர்ச்சி அமைந்த வாழ்க்கையைக் கற்கும் ஒவ்வொருவருக்கும் ஒரு வேட்கை தோன்றுவது இயற்கை. இந்த வளர்ச்சிக்குக் காரணம் ஏதோ சிறந்த அடிப்படை இருக்கவேண்டும், அந்த அடிப்படை எது என்று அறியும் வேட்கை தோன்றும்.

சமயத்தைப் பற்றியும், கடவுளைப் பற்றியும், கடவுளை அடைவதற்காகக் கடைப்பிடிக்கும் நெறியைப் பற்றியும் பல அறிஞர்களின் கருத்துக்களை எழுதிக் கேட்டுப் பெற்றுத் தொகுத்த "இக்காலத்து இந்தியாவின் மெய்யுணர்வு" (Contemporary Indian Philosophy) என்னும் நூலிற்குக் காந்தியடிகளும் தம் கருத்தை எழுதித் தந்தார். அவருடைய கருத்தே நூலின் முதலில் அமைக்கப்பட்டிருக்கின்றது. அதுவே மிகச் சுருக்கமானதாகவும் தெளிவானதாகவும் திட்பமானதாகவும் இருக்கின்றது. காந்தியடிகளின் வாழ்வு முழுதும் என்ன அடிப்படையில் இயங்கியது என்பதை அறிய விரும்புகின்றவர்களுக்கு அது போதும். அந்த மணிமொழி வருமாறு:—

"என் மதம் இந்துமதம். இந்துமதம் என்றால் எனக்கு முழு மக்களினத்தின் மதமாகும்; எனக்குத் தெரிந்த எல்லா மதங்களின் நல்ல பகுதிகளையும் தன்னிடத்தே கொண்டதாகும்.

வர வர, கடவுளே உண்மை என்று சொல்வதை விட்டு, உண்மையே கடவுள் என்று சொல்லிவருகின்றேன். என் மதத்தை இன்னும் நன்றாக விளக்குவதற்காகவே இவ்வாறு சொல்லி வருகின்றேன். இந்து மதத்தில் கடவுளின் ஆயிரம் பெயர்களையும் செய்யுள் வடிவில் கூறும் நூல் ஒன்று உண்டு. அதை ஆயிரக்

கணக்கான இந்துக்கள் நாள்தோறும் காலையில் ஓதுவார்கள். நான் ஒரு காலத்தில் அதை மனப்பாடம் செய்திருந்தேன். ஆனால் இப்போது எனக்குக் கடவுளை விளக்க உண்மையைப் போல் வேறு எதுவும் அவ்வளவு பயன்படுவதில்லை. கடவுள் இல்லை என்று கூறப்படுவதை நாம் அறிவோம். ஆனால் உண்மை இல்லை என்று மறுக்கப்படுவது காணோம். மிக்க அறியாமை உடையவர்களிடத்திலும் ஓரளவு உண்மை காணப்படுகின்றது. நாம் எல்லோரும் உண்மை என்னும் பெருஞ் சுடரின் ஒளிப் பொறிகளே. இந்த ஒளிப் பொறிகளின் தொகுதி இன்னது என்று வருணிக்க முடியாதது; அதுவே இதுவரையில் அளந்தறியப்படாத உண்மை என்னும் கடவுள். இடைவிடாத தொழுகையின் வாயிலாக நாள்தோறும் அதை அணுகிச் செல்லும் வாய்ப்பை அது எனக்கு நல்குகின்றது.

இந்த மதத்தினால் சமுதாய வாழ்வில் ஏற்படும் பயன், ஒருவருடைய அன்றாடச் சமுதாய உறவில் காணப்படும். இத்தகைய மதத்தின்படி உண்மையாக ஒழுக வேண்டுமானால், இடையறாது உயிர்களுக்குச் செய்யும் தொண்டுகளில் ஒருவன் தன்னை மறந்து இழக்க வேண்டும். உயிர்களாகிய எல்லையற்ற பெருங்கடலில் கலந்து அடியோடு மூழ்கி ஒன்றுபடாவிட்டால், உண்மையை உணர முடியாது. ஆகையால், சமுதாயத் தொண்டிலிருந்து விலகுவது என்னால் முடியவில்லை. அதைவிட இன்பமும் எனக்கு இந்த உலகத்தில் இல்லை. சமுதாயத் தொண்டு என்பது இங்கே வாழ்க்கையின் ஒவ்வொரு துறையையும் குறிக்கும். இந்தத் திட்டத்தின்படி தாழ்ந்தது என்று ஒன்று இல்லை; உயர்ந்தது என்றும் ஒன்று இல்லை; ஏன் என்றால், எல்லாம் ஒன்றே; நாம் பலராகத் தோன்றுவது வெளித் தோற்றமே.''